


ஸ்ரீ சாரதாமணி தேவி.

(ஸ்ரீ பகவான் இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் தேவியார்.)

இவர் சரிதை அடுத்தமீ சஞ்சிகையில் வெளிவரும்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி | பிரபவஹு ஆடிமீ ௧உ | பகுதி |
| 13 | 1927ஹு ஜூலைமீ 16உ | 1 |

## கடவுள் வணக்கம்.

பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற
பரவெளியி லுண்மை காட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசு காட்டித்
தாரான மாய்நிற்க நிற்சிந்தை காட்டிச்
சதாகால நிஷ்டை யெனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலையந்
தனைக்காட்ட நாள் செல்லுமோ
காரார வெண்ணறா மனந்தகோ டிகணின்று
காலூன்றி மழை பொழிதல் போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மியா னந்த வெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவு முகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. (1)

மின்னை யன்னபொய் வாழ்க்கையே நிலையென மெய்யாம்
உன்னை நான்மறந் தெவ்வண முய்வண முரையாய்
முன்னை வல்வினை வேரற முடித்தென்று முடியாத்
தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடுந் தக்கோய். (2)

எம்ப ராபர வெம்முயிர்த் துணைவவென் றிறைஞ்சும்
உம்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்றா யுன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென வடிமை
நம்பி னேனினிப் புரப்பதெக் காலமோ நவிலாய். (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. 'பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற பரவெளி' என்றது பரமாகாய வெளியில் அளவுகடந்த அண்டங்கள் இருத்தலை நோக்கியாம். இதனால் பூதாண்டம், தேவாண்டம், மகாண்டம், அகிலாண்டம், சுவாண்டம், பகிரண்டம், பத்மாண்டம் முதலிய அண்டங்கள் அடங்கினமை காண்க. இவ்வாறு கோடானுகோடி யண்டங்களைத் தன்னுள் அடக்கிவைத்துக் கொண்டிருந்தாலும் அந்தப் பரவெளி நிலையற்றதெனவும், தத்துவங்களின் காரியமாய் சடமெனவும் ஆசிரியர் தெரிந்துகொண்டமையின் 'பரவெளியின் உண்மைகாட்டி' என்றார். மனம் இந்த அசத்தான காரியங்களிலேயே ஊன்றி வியாபித்து வீணே யுழல்வதை நோக்கி, 'பற்று மனவெளி காட்டி' என்றும், அம் மனம் போனவழியே அறிவை நுழைத்து அலையும் நிலைமையை விளக்கினமையின் 'மனவெளியினிற் றோய்ந்த பாவியேன் பரிசுகாட்டி' என்றும், மேற் சொல்லியவை யனைத்திலும் சிறிதுங் கவலை வைக்காமல் மனத்தை ஒன்றுபடுத்துந் தன்மையைக் குறிப்பித்தமையின் 'தாராளமாய் நிற்க' என்றும், அங்ஙனம் ஒன்றுபட்ட மனமானது எக்காலத்தும் தியானத்துடனே நிற்கும் நிலையில் வைத்தமையின் 'சதாகால நிஷ்டையெனவே சகசநிலை காட்டினை' என்றும், இத்தன்மையான சோபானநிலைகள் பரோபகாரமாகக் கூட்டிவைத்தும், மேலான சுகம் உதிக்கும் சுத்தாத்துவித அனுபவப் பேற்றினைக் கூட்டிவைப்ப தென்றோ வென்பார் 'சுகாதீதநிலையந்தனைக்காட்ட நாள் செல்லுமோ' என்றுங் கூறினார்.

காரார வெண்ணரு மனந்த கோடிகணின்று = எண்ணரும் அனந்த கோடிகள் (ஆகிய) கார் (மேகங்கள்) ஆரநின்று (நிறைந்து நின்று).

கால்வீசி = காற்றுவீசி.

கம்மி = மூடிக்கொண்டு.

சோராது = இடையறாது.

2. அடியார்களுக்கு அவர்களுடைய ஜென்மாந்தர வினைகளை ஒழித்துக் கிருபைபுரியும்படியான இறைவனே! மின்னலைப்போன்று நிலையற்ற வாழ்வை நிலையானதென்று மயங்கி, சத்தாகிய உன்னை மறந்து நான் உஜ்ஜீவிப்ப தெப்படி? என்று இப்பாடலில் வருந்துகிறார்.

3. எமது சுவாமியே! உன்னை வணங்கும் விண்ணுலகத்தார்க்கும் மண்ணுலகத்தார்க்கும் இரங்கி அவர்களுடைய மனத்தினிடத்தே நடனஞ் செய்கின்றாய்; உனது திருவடியையே நம்பியுள்ள அடியேனை ரக்ஷித்தருள்வது எக்காலம்? என்று இச்செய்யுளில் வேண்டுகிறார்.

புரத்தல்-ரக்ஷித்தல்.

*

---




## நம் போதினியின் 13-வது ஆண்டு.

எங்கும் நிறைந்த பரஞ்சோதியாகிய முழுமுதற் கடவுளின் கருணையால் நடைபெற்று நாடோறும் செழிப்புற்று வளர்ந்தோங்கிவரும் நம் ஆனந்தபோதினிக்கு இந்த ஆடி௴ 1உ 13-வது ஆண்டு தொடங்குகிறது. இப்பத்திரிகையானது தோன்றிய நாள் தொட்டு மதபேதம், வகுப்புபேதம் முதலியன இன்றிப் பொது நோக்கத்துடன் எல்லோருக்கும் பயன்படத்தக்க பற்பல கட்டுரைகளைக் கொண்டு வெளிவருவதனாலேயே, இதனைப் பலரும் விரும்பி வருடந்தோறும் இதற்குப் பல ஆயிரக்கணக்கான சந்தாதாரர்களாகச் சேர்ந்து இப்போது இருபதினாயிரத்துக்கு மேற்பட்ட சந்தாதாரர்களிருக்கின்றனர். சென்ற ஆண்டில் இது, தேசபக்தர் சரித்திரங்களுடனும், தேசநலத்தை விருத்தி செய்யத்தக்க பல கட்டுரைகளுடனும், சைவம், வைஷ்ணவம், வேதாந்தம், பொது நீதி, கைத்தொழில் விவசாயம், வியாபாரம், வைத்தியம், உலக அதிசயங்கள், மாதர்நீதி, மாணவர் போதனை, கல்விவிருத்தி, வர்த்தமானங்கள் முதலிய பலவற்றைப்பற்றிய வியாசங்களுடனும், பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பகுதிகளையும் விளக்கும் சித்திரப்படங்களுடனும், அதற்கு முந்தின வருடங்களினும் அதிகமாக 48 பக்கங்களுடனும் வெளிவந்தபடியால் தமிழர்க்கு இதன்பால் முன்னினும் அதிக அபிமான மேற்பட்டு இதற்கு அநேகம் புதிய சந்தாதாரர்கள் சேர்ந்ததோடு மேலும் மேலும் பலரைச் சேர்த்துக்கொண்டும் வருகிறார்கள். பலர் ஜீவிய சந்தாதாரர்களாகவும் சேர்ந்துள்ளார்கள்; அநேகம் கல்விமான்களாகிய அறிஞர்கள் உயர்ந்த பல கட்டுரைகளை யெழுதியும் உதவிபுரிந்து வருகின்றார்கள். இவ்வாறு நண்பர்கள் பலவகையிலும் நம் போதினி மீது அபிமானஞ்செலுத்தி வருவதால் மற்ற வருடங்களைக் காட்டினும் இவ்வருடத்தில் சந்தாதாரரின் தொகை அதிகரித்திருக்கின்

றது; மேலும் சந்தாதாரர்கள் சேர்ந்தவண்ணமாகவே யிருப்பதால் இன்னும் அதிகரிக்கக்கூடும். இங்ஙனம் சந்தாதாரர்கள் போதினிமீ தன்புவைத்து, "மேல்நாட்டிலுள்ள பத்திரிகைகளைப் போல் அதிகரித்த சந்தாதாரர்கள் உள்ள பத்திரிகைகள் நம் தமிழ் நாட்டில் இல்லை" என்று பலர் கூறும் ஒரு பெருங்குறை நிவர்த்தியாகும்படி இதன் சந்தாதாரரின் எண்ணிக்கை அதிகரிக்கச் செய்துவருவது பற்றி நாம் அளவில்லா ஆனந்த மெய்துவதோடு அவர்களுக்கு என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

மேலும் நாம் சென்ற வருடத்தில், பத்திரிகை வேண்டியவர்கள் சந்தாத்தொகையை முன்னரே அனுப்பிவிட வேண்டுமென்றும், வேண்டாதவர்கள் அவ்விவரத்தைத் தெரிவித்துவிடவேண்டுமென்றும், இவ்விரண்டிலெதையும் செய்யாதவர்க்கு வி. பி. யனுப்பப்படுமென்றும் தெரிவித்தபடி பெரும்பான்மையோர் சந்தாத்தொகையை முன்னரே அனுப்பிவிட்டார்கள்; சிறு பான்மையோர் பத்திரிகை வேண்டாமென்று தெரிவித்துவிட்டார்கள்; அவ்வாறு தெரிவிக்காமலும், பணமனுப்பாமலு மிருந்தவர்களுக்கு வி. பி. யனுப்பினோம். அவர்களிற் பெரும் பான்மையோர் அபிமானத்துடன் வி. பி. யைப் பெற்றுக்கொண்டார்கள்; சிலர் மட்டும் வி. பி. யைத் திருப்பி நமக்குச் சொற்ப நஷ்டத்தை உண்டாக்கினார்கள். இவ்வாறு திருப்பியவர்களும், பத்திரிகை வேண்டாமென்று தெரிவித்தவர்களும் மிகக்குறைந்த சிலரேயாதலாலும், பணம் செலுத்தியவர்களும், வி. பி. யைப் பெற்றுக்கொண்டவர்களும் மிகப் பலராதலாலும், மேலும் மேலும் சந்தாதாரர்கள் சேர்ந்து கொண்டேயிருப்பதாலும் விலகிக்கொண்ட சந்தாதாரர்களைப்பற்றி நம் பத்திரிகைக்குக் குறைவுநேர்ந்ததாகக் கருத இடமில்லை. ஆனால், வேண்டாமென்ற விவரத்தை முன்னரே தெரிவித்துவிடாமல் வி. பி. வந்தபின் திருப்பி வீணே நமக்குச் சிறிது நஷ்டத்தை உண்டாக்கியவர்களின் மனப்போக்கைப்பற்றி மாத்திரம் வியப்புறுகிறோம். முன்பணமனுப்பியும், வி. பி. யைப்பெற்றும் நம் போதினியை ஆதரித்த நண்பர்கள் செய்த நன்றி என்றும் மறக்கற்பாலதன்று.

நமக்கு வீண் நஷ்டமுண்டாகாதபடி பத்திரிகை வேண்டாமென்ற விவரத்தை முன்னரே தெரிவித்துவிட்ட நண்பர்களுக்கும் நன்றி கூறுகிறோம். ஆனால் அவர்களிற் சிலர் சந்தா நம்பரைத் தெரிவிக்காமல் எழுதி விட்டதால் ஒவ்வொருவர் விலாசத்தையும்

தேடிக்காணுதலில் மிகுந்த நேரப்போக்கும், சிரமமும் ஏற்பட்டன. இவர்கள் சந்தா நம்பரைக் குறிக்காமல் இவ்வாறு வீண் சிரமத்தை உண்டாக்கியதற்கு மட்டும் விசனிக்கிறோம்.

பத்திரிகையை நிறுத்திக்கொண்டவர்களில் சிலர், பார்ப்பனரைப் பழித்தற்கு இடந்தரவில்லை யென்றும், சிலர் தங்களுக்கு விரோதமான மதத்தைப் பழிக்க இடந்தரவில்லை யென்றும், சிலர் தமக்கு வேண்டாதாரை நிந்திக்க இடந்தரவில்லை யென்றும், சிலர் தங்கள் வியாசங்களைப் பிரசுரிக்கவில்லை யென்றும் காரணங் கூறி நிறுத்திக்கொண்டார்கள். நம் போதினி பொது நோக்கமுடையதாதலின் மதபேதம், வகுப்பு பேதங்களில் தலையிடுதல் முடியாது. வியாசங்கள் மாதந்தோறும் நூற்றுக்கணக்காக வருவதாலும், அவற்றுள் நல்லனவும், பிழைபட்டனவும் கலந்திருப்பதாலும், பத்திரிகையில் இடமுள்ளவரையில் நல்லவற்றைப் பிரசுரித்து வருவோம். மேலும் பத்திரிகையின் நிரந்தர வியாசக்காரர்கள் சிலருண்டு; அவர்களுடைய வியாசங்கட்குரிய இடம் தவிர மீதியிடமே இதர வியாசங்கட்குரியதாம். இக்காரணங்களால் சில கட்டுரைகள் வெளிவரக் காலம் நீட்டித்தலாகும்; சில நின்றுவிடுதலுங்கூடும். ஆதலின், இக்காரணங்களுக்காக நண்பர்கள் பத்திரிகையை நிறுத்திக்கொள்வது பொருத்தமாகாது. மீண்டும் அவர்கள் சந்தாதாரராகச் சேர்ந்துகொள்வதே நலமாகுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறோம்.

முந்தின வருடங்களைப் போல் இவ்வருடத்தில் வி. பி. அதிகமாகத் திரும்பாததாலும், பத்திரிகையை நிறுத்திக்கொண்டவர் மிகச் சிலரேயாதலாலும், பத்திரிகையைப் பெற்றுக்கொண்டவரும், புதிய சந்தாதாரராகச் சேர்வோரும் அதிகரித்து வருவதாலும் தமிழறிந்த அன்பர்கள் நம் போதினிமீது மிகுந்த அபிமானம் வைத்திருக்கிறார்களென்பது நன்கு விளங்குகின்றது. இவர்கள் இவ்வாறு மேலும் மேலும் நம் பத்திரிகையை ஆதரித்து வருவதால் இன்னும் இதனை நல்ல விதத்தில் எல்லோருக்கும் திருப்தியுண்டாகுமாறு நடத்தவேண்டுமென்னும் பேரவா நமக்கதிகரித்து வருகிறது. இன்னும் நம் பத்திரிகையை அதிகப் பக்கங்களுடனும், இதுவரையிலும் வெளிவராத நூதன விஷயங்களுடனும், முகப்புப் படங்களுடனும் நடத்தவும், நம் ஆபீசுக்கென ரூபாய் இருபத்தையாயிரம் செலவிட்டுப் பெரிய கட்டிடமொன்று கட்டவும் உத்தே

சித்திருக்கிறோம். இப்போது சந்தாதாரராகச் சேர்ந்திருப்போரும், இனிச் சேர்வோரும் தங்களோடு மற்றொரு சந்தாதாரரையும் சேர்த்து விடுவார்களேயானால் இந்நோக்கம் எளிதில் நிறைவேறி விடும். இவ்வாறு சந்தாதாரர்களைச் சேர்ப்பது நண்பர்களுக்கு மிகவும் சுலபமான காரியம்; அதனால் நமக்கேற்படும் நன்மையோ அளவிடற்கரியது. ஆதலின், எல்லா நண்பர்களும் போதினி மீதும் நம்மீதும் அன்பு செலுத்தி நம் எண்ணங்கள் பூர்த்திபெறுமாறு செய்து பத்திரிகையை ஆதரிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம். அன்பர்மனமே கோயிலாகக் கொண்டருளும் ஆதிமூர்த்தியாகிய இறைவன் நம் மனைவர்க்கும் நலந்தருவானாக.

ஓம் தத் ஸத்.

## இந்தியாவும் ஆரம்பக் கல்வியும்.

(ஆரம்பக்கல்வியாவது—சிறுவர்க்கு 5-வயதிலிருந்து சுமார் 15-வயது வரை போதிக்கப்படுவதாம்.)

'எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்'

'எண்ணென்பவேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு'

என்று தமிழ் மூதாட்டியாகிய ஔவைப்பிராட்டியாரும், பெருநாவலரும் கூறியுள்ளார்களாகையால், மனிதர்களாய்ப் பிறந்த நமக்குக் கல்வி இன்றியமையாததென்பது சொல்லாமலே விளங்கும்.

இப்போது இந்தியநாட்டின் கல்வி நிலையைக் குறித்து ஆய்ந்து, இந்நாடு கல்வித்துறையில் எவ்வளவுதூரம் முன்னேற்ற மடைந்திருக்கிறது என்பதைக் கவனிக்கவேண்டிய தவசியம். பண்டைக் காலத்தில் இந்தியா மற்றத்துறைகளில் விருத்தியடைந்திருந்ததைப் போல் கல்வித்துறையிலும் விருத்தியடைந்திருந்தது என்பதற்கு அநேக சான்றுகள் கிடைக்காமல் போகவில்லை. பண்டைக்காலத்தைப்பற்றிப் பன்னிப் பன்னிப் பேசிக்கொண்டிருத்தலில் பயனில்லை. போனதுபோக, இனி நடக்கவேண்டியவைகளைப் பற்றிக் கவனிப்பதுதான் அறிவுடைய மக்களால் விரும்பப்படும் செயலாகும்.

ஜனங்கள் குறைந்தது எழுதவும் படிக்கவுமாவது தெரிந்து கொண்டிருக்கவேண்டும். அப்படியில்லாவிட்டால் அதனால் எண்ணிறந்த கஷ்டங்கள் நேரிடுகின்றன வென்பது கண்கூடு. இந்தியாவின் மொத்த ஜனத்தொகை 33-கோடிக்குமேல் இருக்கிறதென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. கோடிக்கணக்கான ஜனத்தொகையைக்கொண்ட நம் இந்தியநாட்டில் ஆரம்பக்கல்வியின் நிலை எங்ஙனம் இருக்கிறது? மற்ற நாடுகளில் அது எங்ஙனம் இருக்கிறது? என்று கவனிக்குமிடத்து நம் நாடு அதில் மிகத் தாழ்ந்த நிலையிலிருக்கிறதென்பது விளங்குகிறது; இதர நாடுகளில் கல்வியானது விருத்தியடைந்தும், நம் நாட்டில் மாத்திரம் விருத்தியடையாமலும் இருக்கிறதற்கு முக்கிய காரணங்கள் என்னவென்று கவனிக்க வேண்டும்.

அங்ஙனம் கவனித்தால் விஷயங்கள் தெற்றென விளங்கும். 1921-ம் வருட இந்திய ஜனக்கணக்கின்படி பர்மா ஒழிந்த மற்றப் பிரிட்டிஷ் மாகாணங்களில் நூற்றுக்குச் சுமார் 7-பேர் கல்வி வாசனையுடன் கூடியவர்களாய் இருக்கிறார்கள். இத்தகைய நிலை பெரிதும் இரங்கத்தக்கதாம். இந்தியாவிலுள்ள சில சுதேச சமஸ்தானங்களுடன் பிரிட்டிஷ் இந்தியாவின் கல்வி நிலையை ஒப்பிட்டுப் பார்த்தால், அது அவைகளுக்கு மிகக் கீழ்ப்பட்டிருக்கிறது. அது பின்வரும் அட்டவணையால் தெரியவரும்:—

| மாகாணம் அல்லது சமஸ்தானம் | கல்வி யறிவுள்ளார் நூற்றுக்கு |
|---|---|
| பர்மா தவிர மற்ற பிரிட்டிஷ் இந்தியா ... | சுமார் 7 |
| பரோடா .... | ,, 14 |
| கொச்சி ... | ,, 22 |
| திருவாங்கூர் ... | ,, 28 |
| பர்மா ... | ,, 31 |

இதன்படி இந்திய பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு உட்பட்ட பரோடா, கொச்சி, திருவாங்கூர் ஆகிய இச்சமஸ்தானங்களின் கல்வி பிரிட்டிஷ் இந்தியாவின் கல்வி நிலையைக்காட்டிலும் அதிகமாக விருத்தியடைந்திருக்கிறதற்காக நாம் மகிழ்ச்சியே கொள்ள வேண்டும்.

இங்ஙனம் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளவர்களின் கல்விக் குறைவை நிவர்த்திப்பதற்காக ஆங்காங்கு ஆரம்பப் பள்ளிக்கூடங் களை ஏற்படுத்தவேண்டும். 1919-ம் வருடச் சீர்திருத்தச்சட்டப் படி ஜனப் பிரதிநிதிகளாகிய மந்திரிகளுக்கு அதிகமான அதிகாரங் கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன வென்பதை எவரு மறிவர். இத் தகைய மந்திரிகள் அறிவாற்றல்களில் தேர்ந்தவர்களாயும், ஜனங் களுக்கு நன்மை செய்யக்கூடியவர்களாயு மிருத்தல்வேண்டும். இத் தகைய மந்திரி பதவிக்கு வரக்கூடிய சட்டசபை மெம்பர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை ஜனங்களுடையதா யிருக்கின்றது; அத் தகைய மனிதர் அறிவிற் சிறந்தவர்களாகவே யிருத்தல் வேண்டும்; அங்ஙனமாதற்கு ஆரம்பக்கல்வியே அடிப்படையாம்.

இத்தகைய வாக்காளர்கள் தங்களுக்குள்ள வாக்குக்களைச் சரி யான வழியில் உபயோகிக்க அவர்களுக்குப் போதுமான ஆரம்பக் கல்வியை முதல்படியாகப் புகட்டவேண்டியது அத்தியாவசிய மாகும்.

இந்தியாவிலுள்ள ஜனங்களில் பெரும்பாலோர் கிராமங்களில் வசிக்கிறார்கள் என்ற விஷயம் அனைவர்க்கும் தெரிந்த தொன்றும். இந்தியா பொருளாதாரத்துறையில் விருத்தி யடைய வேண்டு மானால் அந்தக் கிராமவாசிகள் விருத்தியடையவேண்டும்; அதற்கு ஆரம்பக்கல்வியே இன்றியமையாததாம். கல்வி ஒன்றைக் கொண்டு தான் மானிடர்கள் முன்னேற்றம் அடையக்கூடும். மேல் நாட்டா ருடைய முன்னேற்றத்திற்குக் காரணம் அவர்களிடம் ஏற்பட் டுள்ள கல்வியேயாம்.

இன்னும் இத்தகைய அரசியல் விஷயங்களிலும் பொருளாதார விஷயங்களிலும் முன்னேற்றம் அடைவதற்கு மாத்திரம் மானிடர் களுக்குக் கல்வி அவசியம் என்று எண்ணிவிடக்கூடாது. ஜனங்க ளின் சன்மார்க்க வாழ்க்கைக்கும் கல்வி இன்றியமையாததா யிருக் கிறது. இக்காலத்தில் பெரும்பாலாரிடத்துச் சன்மார்க்கக் கல்வி என்பது ஊமையன் கண்ட கனவை ஒத்திருக்கின்றது. இப்போது பள்ளிக்கூடங்களில் சன்மார்க்கபோதனை அவ்வளவாகக் கிடையா தென்றே கூறிவிடலாம். அங்ஙனம் இல்லாமல் இருப்பதால் அவர் கள் நல்ல பழக்க வழக்கங்களைக் கைக்கொள்ளக்கூடாமல் தாம் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்ற பிடிவாதக் கொள்கைகளில் புகுந்துழன்று திரிகின்றனர். பண்டைக்காலத்தில் ஆசிரியர்களால்

கதைகளின் மூலமாகவும் கீர்த்தனங்கள் மூலமாகவும் பிரார்த்தனைகள் மூலமாகவும் பிள்ளைகளுக்கு ஆரம்பத்திலேயே நற்போதங்கள் போதிக்கப்பட்டு வந்தன. அப்போதனைகள் அவர்களுடைய மனத்தில் பசுமரத்தாணியைப் போன்று பதிந்து அவர்களுடைய பிற்கால வாழ்க்கையையும் தூய்மைப்படுத்தி வந்தன.

நம்முடைய முன்னோர்கள் 'கடவுளே மனிதனாய் இருக்கிறான், மனிதனே கடவுளாய் இருக்கிறான். நாம் அனைவரும் பிறப்பு இறப்பு இல்லாத ஒரு பரம்பொருளின் குழந்தைகள்' என்ற உண்மையை உலகத்தினருக்கு அறிவித்தவர்கள். அத்தகைய பெரியார்களுடைய கால்வழியில் வந்தவர்களாகிய நாம் தன்னம்பிக்கையையும், தீரத்தையும், சுய மரியாதையையும் இழந்துவிட்டுக் கோழைகளாய் இருக்கிறோம். அதற்குக் காரணம் கல்வியும் சன்மார்க்க போதனையும் இல்லாமல் போனதேயாகும்.

மேற்கூறிய கெடுதல்களையெல்லாம் நீக்கக்கூடியது சர்வமக்களுக்கும் கல்வி கற்பிப்பதேயாகும். அக்கல்வி நம் தேசத்திற்குத் தக்கதாய் இருக்கவேண்டும். அப்படிக் கல்வி கற்பித்தால்தான் நம்முடைய மக்கள் உறக்கத்தினின்றும் விழித்தெழுந்து நீண்டகாலம் வரை சன்மார்க்க வாழ்க்கையைக்கொள்ளச் சாத்தியம் ஏற்படும்.

மேல் நாடுகளில் அரசியல் முன்னேற்றத்துடன்கூட ஆரம்பக் கல்வித்துறை முன்னேற்றமும் சேர்ந்தாப்போல் விருத்தியாகியிருக்கிறது. ஜப்பானின் ஜனத்தொகையில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் போய்ப் படிப்பவர்களின் தொகை, நூற்றுக்குச் சுமார் 15-வீதம் இருக்கின்றது. ஜப்பானில் பள்ளிக்கூடத்தில் போய்ப் படிக்கும் வயதை அடைந்த நூறு பிள்ளைகளில் சுமார் 99-பேர் பள்ளிக்கூடங்களுக்குச் சென்று படித்து வருகிறார்கள். இங்கிலாந்து வேல்ஸ் ஆகிய இம்மாகாணங்களில் மொத்த ஜனத்தொகையில் நூற்றுக்குப் பதினைந்துபேர் வீதம் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் படித்து வருகிறார்கள். இந்தியாவிலோவெனில் 1924-ம் வருஷத்தில், ஜனத்தொகையில் நூற்றுக்கு மூன்றுபேர் வீதம்தான் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் போய்ப் படித்துவந்தார்கள். இதைக்கொண்டு கல்வித்துறையில் நம் இந்தியாதேசமானது ஜப்பான் இங்கிலாந்து ஆகிய இந்நாடுகளுக்கு ஐந்து பங்குக்குமேல் தாழ்ந்திருக்கிறதென்பது ஐயமற விளங்குகிறது.

பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் ஏற்படுவதற்குமுன் நம் நாட்

டின் அநேக பகுதிகளில் கல்வி விருத்தியடைந்திருந்ததற்கு அநேக சான்றுகள் கிடைக்கின்றன. 1815-ம் வருட ஜனக் கணக்கைக் கவனித்தால் பையன்களில் நூற்றுக்கு 30-பேர் வீதம் பள்ளிக் கூடங்களில் சேர்ந்து கல்வி பயின்றார்கள் என்பது தெரியவருகின்றது. பத்தொன்பதாவது இருபதாவது நூற்றுண்டுகளில் ஏற்பட்ட கல்வித்துறை மாறுதல்களினாலும், காலப்போக்குக் காரணமாகவும் கல்வியின் அபிவிருத்தி குறைவடைந்திருக்கிறது. மேற்கூறியபடி குறைந்த அளவில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் படித்து வெளிவருகிறவர்களுங் கூட சிறிதுகாலங் கழித்துத் தாங்கள் கற்ற கல்வியை அடியோடு மறந்தவராகின்றனர். காரணம் அவர்களைச் சுற்றியுள்ளவர்கள் கல்வி வாசனை அற்றவர்களாயிருப்பதேயாகும்.

1919-ம் வருட சட்டசபை மூலமாய் மந்திரிகள் ஆரம்பக் கல்வியின் விருத்திக்காக அநேக காரியங்களைச் செய்யச் சந்தர்ப்பங்கள் வாய்த்திருந்தன. சட்டசபை அங்கத்தினர்களும் ஜனங்களிடை குடிகொண்டுள்ள அறியாமையை ஒழிக்கப் பாடுபட்டுள்ளார்கள்; எனினும் மந்திரிகள் தங்களுக்குக் கிடைத்த சந்தர்ப்பங்கள் முழுவதையும் சரியாகப் பயன்படுத்திக்கொள்ளாமல் சிறிது காட்டி விட்டுவிட்டனர். இது திருப்திதரக்கூடியதாயில்லை. இனியேனும் மந்திரிகள் தங்களுக்குக் கிடைத்துள்ள அதிகாரத்தைக் கொண்டு கல்வித்துறையில் அதிகமான விருத்தியை யுண்டாக்குவார்களென்று நம்புகிறோம்.

பம்பாய், சென்னை, மத்தியமாகாணம் ஆகிய இம்மூன்று மாகாணங்களிலும் ஜனத்தொகையில் நூற்றுக்குச் சுமார் 20, 17, 9 பேர் வீதம் நம்மவர் பள்ளிக்கூடங்களில் 1923-ம் வருஷத்தில் படித்து வந்தார்கள். 1924-ம் வருடத்தில் அவர்களின் தொகை சுமார் 20; 19; 9-க்கு எட்டியது. இதைக்கொண்டு இந்தியாவில் முன்னேற்றமடைந்த மாகாணங்களிலும் கல்வி அபிவிருத்தி மெதுவாக நடைபெறுகிறதென்பதைத் தெரிந்துகொள்ளலாம். சென்னை மாகாணம் கல்வித்துறையில் விருத்தியாவதுபோல மற்ற மாகாணங்களும் விருத்தியானல் இன்னும் நாற்பதுவருடகாலத்தில் இந்தியாவும் கல்வித்துறையில் மற்ற மேல்நாடுகளுக்குச் சமமாக வந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை.

சென்னை இராஜதானியைச்சேர்ந்த முனிசிபாலிட்டிகளும், ஜில்லாப்போர்டு, தாலுகாபோர்டு ஆகிய ஸ்தல ஸ்தாபனங்களும் ஆரம்

பக்கல்வியை விருத்திசெய்வதற்காக உழைத்து வருகின்றனவெனினும் அவைகளுடைய உழைப்பு போதுமான அளவைக்கொண்டதாயில்லை. இனியேனும் அவைகள் ஆரம்பக் கல்வி விஷயத்தில் இன்னு மதிகமான சிரத்தை செலுத்திப் பிள்ளைகள் அனைவரும் கல்வி வாசனையைப் பெறும்படி செய்தல் வேண்டும். ஆரம்பக் கல்வியைக் கட்டாயப்படுத்திவிடவேண்டும். சில முனிசிபாலிட்டிகளும் ஸ்தலஸ்தாபனங்களும் அங்ஙனம் செய்திருக்கின்றன. அவர்களை நாம் மிகக் கொண்டாடுகிறோம்.

நமது சென்னைநகரைச்சேர்ந்த முனிசிபாலிட்டியாரும் ஆரம்பக்கல்வி விஷயமாய்ப் பெரிதும் உழைக்க ஆரம்பித்துள்ளனர். அநேக பேட்டைகளில் கட்டாயப் படிப்பையும் அமுலுக்குக் கொண்டுவந்துள்ளார்கள். இன்னும் அவ்விஷயத்தில் அவர்கள் தீவிரமாய் உழைக்கவேண்டுமென்று நாம் கருதுகிறோம்.

ஆரம்பக்கல்வியை விருத்தியாக்க நியமிக்கப்பட்டவர்களும் இனி நியமிக்கப்படுகிறவர்களும் அவ்விஷயங்களில் உயர்ந்த நோக்கத்தைக்கொண்டவர்களாயும், அநுபவசாலிகளாயும் இருக்கவேண்டும். மேல்நாட்டுப் பட்டங்களைக் கொண்டவர்கள்தாம், அதற்குத் தகுதியானவர்கள் என்ற குருட்டு எண்ணமும் ஒழியவேண்டும். பிள்ளைகளுக்குச் சன்மார்க்கம் போதிக்கப்படவேண்டும். அதற்கான புத்தகங்களைப் பாடபுத்தகங்களாக அமைக்கவேண்டும். சிறுவர்களுக்குக் கைத்தொழிலும் கற்றுக்கொடுக்கவேண்டும். இவைபோன்ற விஷயங்களால்தான் ஆரம்பக்கல்வி பயனை அளிக்கும்.

ஓம் தத் ஸத்.




## ஸ்ரீ மாதவ கோவிந்த ரானடே.

ஒவ்வொரு தேசத்திற்கும் அங்கு ஜனிக்கும் பெரிய அறிவாளிகளே நிகரற்ற செல்வமாகின்றனர். அவர்களால் நாட்டின் பெருமை பெருகுகின்றது. கற்றவர் கூட்டத்திற்கு அன்னோர் உற்ற தலைவராய் விளங்குகின்றனர். அவர்கள் மக்களிடத்து அரசியல் ஞானத்தைப் பெருக்கித் தமது தொண்டையியற்றி இகத்தி லழியாப் புகழையும் பரத்தில் மோக்ஷத்தையும் அடைகின்றனர். பொன்னினும் நவமணிகளினு மிக்க அத்தேசபக்தருள் ஸ்ரீ மாதவ கோவிந்த ரானடே முதன்மையானவர்.

## பிறப்பு பாலியம் கல்வி.

இப்பெரியார் 1842-ம் ஆண்டு ஜூலைத் திங்கள் 18-ம் நாளில் நாட்டினெழில் சிறக்கப்பிறந்தார். இவருடைய மூதாதையரைப்பற்றிய சரித மெதுவும் தெளிவாகக் கிடைக்காவிடினும் இவருடைய பாட்டனாரின் தந்தை சாங்கிலீ சமஸ்தான வக்கீலாகவும், பாட்டனார் பூனா ஜில்லாவில் ஒரு நிர்வாக உத்தியோகஸ்தராகவும், தந்தை நாஸிக்கைச் சேர்ந்த நிப்காட் (Niphad) என்ற ஊர் மம்லத்தாரின் குமாஸ்தாவாகவு மிருந்தது தெரியவருகிறது. ரானடேயுடைய முன்னோர் செல்வவந்தருமல்லர்; மிக்க ஏழையருமல்லர்; நடுத்தர ஸ்திதியுடையவர்கள். அவர்கள் மகாராஷ்டிரகுலத்தைச் சார்ந்தவர்கள். சிறு பிராயத்தில் இவர் தொன்மையான திண்ணைப்பள்ளிக்கூடத்திலே வாசித்து வந்தார். ரானடே பதினோராம் பிராயத்தை யடைந்த உடனே இவருக்கு ஆங்கிலம் கற்பிக்கவேண்டி, இவருடையபெற்றோர்கள் இவரைக் கோல்காப்பூர் கலாசாலைக் கனுப்பினர். ஆங்கு பயின்றபின்னர் இவர் பம்பாய் நகரிலுள்ள எலிபின்ஸ்டன் கலாசாலையிற் சேர்ந்து வாசித்துவந்தார். இவர் மாணவரா யிருக்கும்பொழுது, 'மகாராஷ்டிர மன்னர்கள்' என்பது பொருளாக ஓர் வியாசமெழுதி வெளியிட்டார். அக்கட்டுரையில் ஆங்கில அரசாட்சியின் சில பொருத்த மற்ற விஷயங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருந்தமையாலும், மகாராஷ்டிரர்களின் மன எழுச்சிக்குக் காரணமான தீவிர தேசாபிமானச் சொற்க ளடங்கியிருந்தமையாலும் அக்கலாசாலையின் ஐரோப்பியத்தலைமை யாசிரியர் சினந்து இவருக்கு ஆறுமாத உபகாரச் சம்பளத்தைக் கொடாதொழிந்தனராம். இவரால் கலாசாலை மாணவர்களுக்குத் தாய் நாடு, தாய் மதம் என்ற உணர்ச்சி யேற்பட்டது. எலிபின்ஸ்டன் கலாசாலையில் ரானடே தலைமாணாக்கராகி 1862-ல் கலாகுமாரப் பரீக்ஷையில் (B. A.,) ஆங்கிலத்தில் முதன்மைபெற்றுத் தேறினார். 1865-ல் இவர் கலாதிகாரராகி (M. A.,) ஓர் தங்கப்பதக்கமும் பரிசாகப் பெற்றார். 1866-ம் ஆண்டில் இவர் சட்டப் பரீக்ஷைக்குச் சென்று பட்டதாரியானார். பெரும்பாலும் இவர் அரசாங்கத்தாரிடமிருந்து உபகாரச் சம்பளம் பெற்றே கல்வி பயின்றார்.

## உத்தியோகம்.

ரானடேக்குப் பின்பு கல்வி இலாகாவில் மராத்தி பாஷா மொழிபெயர்ப்பாளர் வேலை கிடைத்தது. சில ஆண்டுகள் சென்ற பின்னர் இவருக்குக் கோலாப்பூர் சமஸ்தான நியாயமன்றத்தின் தலைமை குமாஸ்தா பதவி யளிக்கப்பட்டது. இவ்வுத்தியோகத்திலும் இவர் நீடித்திருக்கவில்லை. 1872-ல் இவர் போதகாசிரியர் வேலையை விரும்பி எலிபின்ஸ்டன் உயர்தரக் கலாசாலையில் ஆங்கில ஆசானாக அமர்ந்தார். பேசுவதிலும், விஷயங்களை விளக்கிக் கூறுவதிலும் இவர் அதிக நிபுணத்துவ மடைந்திருந்தமையால் மாணவர்களால் பெரிதும் போற்றப்பட்டு வந்தார்; மகாராஷ்டிர மன்னர்களின் தோள் வலிமையைச் சிறப்பித்து மாணவர்கட்குத் தேசபக்தியை யூட்டிவந்தார். சிவாஜியின் சரித்திரத்தில் ரானடேக்கு அதிகப் பிரியமுண்டு. சத்தியமான

வாள் கொண்ட சிவாஜியின் வீரத்தைத் தாளில் மைகொண்டெழுதி மாண வர் மனதில் சுதேச உணர்ச்சியுண்டாக்கிச் சிறந்தார் ரானடே. இதன்பிறகு இவருக்கு நியாயவாத (வக்கீல்) தொழிலில் பிரிய மேற்பட்டது. சிலகாலம் இவர் பம்பாய் மாகாண நியாயஸ்தலத்தில் தொழில் நடாத்திவந்தார். வழக் காடும் வழியில் அக்காலத்தில் இவர் மிகவும் சாமார்த்தியசாலியா யிருந்தமை யால் அரசாங்கத்தார் இவரை 'சப் ஆர்டினேட் ஜட்ஜ்' ஆக நியமனம் செய் தனர். அதிலிருந்து இவர் மாகாண நியாயாதிபதியாகவும் (Presidency) Magistrate) சிறு குற்ற நியாயாதிபதியாகவும் (Small Cause Court Judge) இருந்து, படிப்படியாக உயர்ந்து 'ஹைகோர்ட் ஜட்ஜ்' (High Court Judge) ஆனார்.

இவர் நியாயாதிபதி வேலை பார்த்துவந்த காலங்களில் நிகழ்ந்த ஓர் முக் கிய சம்பவம் குறிப்பிடத்தக்கது; துரைத்தனத்தார் ராஜத்துரோகமான விஷயங்களில் ரானடே கலந்துகொண்டிருப்பதாகச் சம்சயித்து, தேசத்தில் குழப்பத்தை உண்டாக்கக்கூடிய கடிதப்போக்குவரவு சிலரால் நடப்பதாக எண்ணி, இவரை விசாரித்தபொழுது, இவர் தூர்த்தர்கள் தம்மைத் துன்பத்திலாழ்த்த அவ்விதம் செய்துவருவதை விளக்கிப் பகிரங்கமாக அக் கடிதங்களை ராஜாங்கத்தாரிடம் கொடுத்துவிட்டார். இவரை நிரபராதியென் றறிந்த் அவர்கள் இவரிடங்கொண்ட அபிப்பிராயபேதத்தை மாற்றிக்கொண் டனர். இவர் நீதி செலுத்திவந்தகாலத்தில் பொறுமையுடன் வாதி பிரதி வாதிகளுடைய உரைகளைக்கேட்டு, நிதானித்து உண்மையை ஆராய்ந் தறிந்து முடிவு கூறுவார். இவரது தீர்ப்பை மேலதிகாரிகள் புகழ்ந்து வந்த னர். தர்மதேவதை வாசஞ்செய்யும் நியாயஸ்தலத்தில் ரானடே சத்யவந்த ராக விளங்கித் தண்டனைபெற்ற குற்றவாளியாலும் போற்றப்பட்டு வந்தார்.

## பாஷாபிமானம்.

நிகழ்காலத்தில், கல்வி சிலரால் உத்யோகத்தைக்கருதியும், சிலரால் பட் டம் பெறும் நோக்கத்துடனும் கற்கப்பட்டு, அவர்கள் கலாசாலையினின்றும் வெளிவந்த பிறகு தாம் அனைத்தையும் கண்டறிந்துவிட்டதாக நினைக்கக் கூடியதாயிருக்கின்றது. ரானடே அவ்வாறு எண்ணவில்லை. ஒருவன் தனது ஆயுட்காலம் முழுவதிலும் மாணவனு யிருக்கவேண்டுமென்பதே இவருடைய அபிப்பிராயம். இவர் மூன்று பாஷைகளில் நல்ல பாண்டித்திய மடைந்திருந் தார். மராத்தி, சமஸ்கிருதம், ஆங்கிலமான மும்மொழிகளிலும் இலக்கிய இலக்கணங்களில் ரானடேக்கு நல்ல வல்லமையுண்டு. இவருடைய தாய் மொழியான மகாராஷ்டிரபாஷையில் இவருக்கதிக அபிமானமுண்டு. இவர் மகாராஷ்டிரச் சரித்திரத்தை ஆங்கிலத்தில் ஆராய்ச்சியுடன் எழுதி வெளி யிட்டார். அதனுல் இந்துதேசச் சரித்திரம் முன்னரே வரைந்துள்ள மேனுட் டுச் சரித்திராசிரியர்களின் பொய்க்கூற்று நன்கு புலனுயிற்று. அந்நூலில் சிவாஜியின் உண்மைத் தேசாபிமானத்தைப் புகழ்ந்திருக்குமளவுகொண்டு ரானடேயின் தேசபக்தியினளவை நிர்ணயிக்கலாம். அர்த்தசாஸ்திரத்தில் இவர்

விசேஷப் பிரியங்கொண்டவர். இந்தியர்களின் சுதேசக் கைத்தொழில், விவசாயம், வியாபாரம் முதலியவற்றைக்குறித்து இவர் பத்திரிகைகளுக்குவரைந்த வியாசங்கள் எண்ணில. பம்பாய் சர்வகலாசாலையில் அக்காலத்தில் பிரபலராயிருந்த மேதா என்னும் பெரியாருடன் போதனுமுறை விஷயங்களில் ரானடே பலத்த வாக்குவாதஞ்செய்து தமது கொள்கையை ஸ்தாபித்தார்.

ஸ்ரீ லக்ஷ்மீகாந்தன்.

---

## கதரின் வெற்றி.

கதர்! கதர்! என்ற சொல்லை யடுத்துவருவது காந்தி யென்னுந் திருநாமம். தேசத் தாய் படும் இடும்பைக் காற்ருது அவள் துன்பம் நீங்கி இன்பம் ஓங்க அப்புனிதர் நல்லதோர் வழியை நல்கினர் நமக்கு! நயவஞ்சகம் நாட்டினில் மிக, ஏழைகள் படுந்துயர் எண்ணிலவாக, அன்பும் அறமும் அறவே குன்ற, தூய்மையும் வாய்மையும் மாய்ந்தனவாக, தாய் பிறர் கைப்படச் சகியாராகி, அப்பெரியோர் தொண்டு நயந்து, இன்றே நவிலுவேன் நன்றேயென்று, அருளும் ஆற்றலும் அளவினிலோங்க, தாய்த் திருநாட்டினேர் தனையரேயாகி, கதர்! கதர்! கதரெனக் கதறினர். அவரருளிய கைநூலாடை தாய்நாட்டி லன்பிலாத அஞ்ஞானத்தைப் போக்கிப் பாரதமக்களின் சீரிய உள்ளத்தில் மெய்ஞ்ஞான விளக்கேற்றுவதாயிற்று.

கதர் தோன்றி ஐந்தாண்டுகளாயின. ௧௯௨௨-ம் ஆண்டே அதன் ஜனன காலம். அவ்வருடமுதல் இந்துதேசச் சரித்திரத்திற்கே ஓர் புதிய சகாப்தமேற்பட்டதெனினும் பொருந்தும். காங்கிரஸ் இயக்கம் தோன்றிய காலம் முதல் தேசசேவை புரிந்துவந்த எத்தலைவரும் புகலாத ஓர் புது உண்மையை இத் தெய்வீகர் புகன்ருர்! 'கண்ணனே! துளவத்தாமனே! என் ஜன்ம பூமியின் நன்மைக் கோர் சிறந்தவழி யருளல் வேண்டு' மென்று உள்ளன்புடன் தோத்திரஞ்செய்த மகாத்மாவிற்குக் கடல்வண்ணன் தனது கரங்கள் நான்கனுள் ஒன்றினில் கொண்ட சக்கரத்தைக் காட்டினன். அன்றுமுதலப் பொற்கரமருளிய இராட்டினச் சக்கரத்தை அக்கரையுடன் சுற்றித் தக்க ஆடையொன்றைத் தாம் நூற்றணிந்துகொண்டு 'நான் கண்ட உண்மை' யென நவின்றனர் காந்தி! தலைவர்களனைவரும் கதரை ஆதரிக்கத்தொடங்கினர். காந்தியடிகள் கதராடையை உலகிற் குணர்த்தியது முதல் கைத்தொழிலால் மேன்மையை யடைந்த அயல் நாட்டாரு மவரைப் போற்றி நின்றனர்.

கதர்! பொதுநோக்குடையது; பாரதபூமியிற் ரேன்றிய ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பாரசீகர், ஜைனர் முதலான சகல மதஸ்தர்களும் எவ்வித ஆக்ஷேபனையுமில்லாமல் கதரை ஆதரிக்கலாம்! ஜாதிக்கொள்கையாற் சண்டையிடுவோர்க்கும் கதர் அவசியமானது. நமது நாட்டில் உற்பத்தியாகும் பருத்தியை நமது கையாலே இராட்டைகொண்டு நூல் நூற்று

கதரிடத்து எவருக்கும் வெறுப்பில்லை; விருப்பந்தான். ஆனால் அணிவதுதானில்லை. முதலில் அறிவாளிகள் கதரணிய வேண்டும். செல்வவந்தர்கள் கதருடுக்கவேண்டும். பாமர சமூகம் படித்தவர்களையே பின்பற்றுகின்றது. மாணவர்கள் ஆசானையும், வேலையாட்கள் எஜமானனையும், சிஷ்யர்கள் குருவையும் பின்பற்றுகின்றனர். ஆகையால் முதலில் ஆசிரியர்களும், எஜமானர்களும்,குருமார்களும் கதரை ஆதரித்து ஏனையோர்க்கு வழிகாட்டிகளாகவேண்டும். தற்கால மந்திரிமார்கள் கதரை வரவேற்றுபசரிக்கின்றனர். அரசாங்கத்தாரும் கதருடுக்கத் தடைபுரியவில்லை. கதர் எந்த ஜாதி, மத சுதந்திரத்திற்கும் தடையாயில்லாததால் அதனைத்தடுக்க எவர் மனமும் இடந்தரா தென்க. ஆகவே, அதனைத் தரிப்பது இந்தியாவிற் பிறந்த ஒவ்வொருவருடைய சுதர்மமாம்.

அன்பர்களே! அடிக்கொரு ஊரில் நொடிக்கொரு மகாநாடு கூட்டி ஆகாயக் கோட்டைகட்ட அஸ்திவாரமிட்டதாற் பயனொன்றுமடைந்தபாடில்லை. தென்னாட்டில் பிராமணரல்லாத இயக்கம். வடநாட்டில் இந்து முகம்மதிய வம்பு. உள்ளன்புடன் தேசகைங்கர்யம் புரிவோர் வெகு அபூர்வம். வீண்வாதம் புரியும் டாம்பீகர்கள் நாட்டை அல்லற்படுத்துகின்றனர். காங்கிரசைப் பலர் தம்மை விளம்பரப்படுத்திக்கொள்ள எண்ணி அன்று சேர்ந்து இன்று வெளியே நிற்கின்றனர். கூடின கோடி மகாநாடுகளும் வாடின. தேர்தல் காலத்தில் முழக்கஞ்செய்தவரெல்லாம் இப்போது உறங்குகின்றனர். வீட்டிலுடுக்க வெள்ளை மல்லும் வெளியில் போகும்போது வெண்கதரும் உடுத்தும் வேடதாரிகள் நாட்டினில் மிகுந்தனர். மஹாத்மாதான் என் செய்வார்? உணவை ஊட்ட முடியும். அதை விழுங்கச் செய்வது இயலாதன்றோ! அனைத்திற்கும் 'ஆம்' என்று தலையாட்டி அனுஷ்டானத்தில் முரண்பாடுடையா ரதிகரித்துவிட்டனர். மகாத்மா ஒரே உபாயமுள தென்றுரைத்தார். அதுதான் கதரின் வெற்றி! ஆதலால் தேசிய முகத்தில் எவ்வித கொள்கைப் பேதமுடையோராயினும் கதருடுக்கவேண்டும்! அதுவே நமது நாட்டிற்கு விடுதலை யளிக்கும்!

ஸ்ரீதரன்.

---

**காந்தி தரிசனம்.**

பாரத தேசத்தில் 'காப்பி' என்னும் பானம் எத்துணை ஆதிக்கம் பெற்றுளதோ அத்துணை அளவு கத ராதிக்க மேற்படுமேல் அன்றே விடுதலை. அறிமின்! எழுமின்!—(தாஸர்)

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.



# ஆரிய சித்தாந்தம்.

## யோகம்.

(545-ம் பக்கத் தொடர்ச்சி.)

சரியான பிராணுயாமத்தால் வியாதிகள் நீங்கும்; சரீரதிடமுண்டாகும்; நாடிகள் வசப்படும். அயுக்தமான பிராணுயாமத்தால் காசம், ஜுரம், காதுவலி, கண்வலி, தலைநோவு முதலிய பல வியாதிகளுண்டாகும். ஆதலால் இரேசகபூரககும்பகங்களைக் குரு வுபதேசித்த முறைதவருமல் சரியாய்ச் செய்யவேண்டும். இரேசகபூரகங்களுடன் செய்யப்படும் கும்பகம், சகித கும்பகமென்னப்படும். இரேசகபூரகங்களில்லாமல் செய்யப்படும் கும்பகம் கேவல கும்பகமென்னப்படும். இந்தக் கேவல கும்பக சித்தியின் பொருட்டே இரேசகபூரகங்கள் அப்பியாசிக்கப்படுவன. இந்தக் கேவல கும்பகம் சித்தித்து விட்டால் யோகசித்தியாம். இதனுல் சகல சித்திகளும் உண்டாகும். இராஜயோகம் சித்திக்கும். குண்டலி என்னும் ஆதாரசித்தியும் நித்திரையினின்றும் விழிக்கும். விழித்தலால் சுழிமுனைநாடி யாதொரு கெடுதியுமின்றி நிமிர்ந்து நிற்கும். அப்போது பிராணவாயு பிரமரந்திரமார்க்கத்தில் செல்லும்.

குண்டலி விழிக்கும்போது ஆறு ஆதார சக்கரங்களும் தோற்றும். பிரமகிரந்தி விஷ்ணுகிரந்தி ருத்திரகிரந்தி (முடிச்சு) ஆகிய மூன்று கட்டுகளும் பேதிக்கப்படும். இந்தக் கும்பகம் வேறு எட்டுவகையாகவும் சொல்லப்படும். அவை முறையே சூரியபேதி, உஜ்ஜீயினி, சீத்காரி, சீதலி, பஸ்திரிகை, பிராமரி, மூர்ச்சை, பிலாவினி என்பனவாம். இவை கேவல கும்பக சித்தியால் செய்யத்தக்கனவாம்; ஏனெனில் இவை கேவல கும்பகசித்திக்குப் பரம்பரா காரணங்களாகின்றன.

சூரியபேதி சித்தியால் (சூரியநாடியால் வாயுவை யிழுத்துச் சந்திரநாடியில் மெதுவாக விடுதலாம்) ஜலதோஷம் சில்விஷம் தலைநோய் முதலியவற்றை நீக்கலாம். சரீரத்திலுள்ள எண்பது வாதங்களையும் நீக்கிக்கொள்ளலாம்.

உஜ்ஜயினி—வாயை மூடிக்கொண்டு இரண்டு நாடிகளாலும் பூரித்துக் கும்பித்துப் பின் சந்திரநாடியால் மெதுவாக இரேசிப்பது. இதனுல் சிலேத்தும தோஷம் நீங்கும்; ஜாடராக்கினி விருத்தியாகும்.

சீத்காரி—கொட்டாவிவிட்டு இரண்டு நாசிகளாலும் ஜலத்தை இழுத்துப் பூரித்துக் கும்பித்து இரண்டு நாசியிலும் விடுதலாம். பூரிக்கும்போது இரண்டு பல் வரிசைகளையும் ஒன்று சேர்த்துக்கொண்டு உஸ் என்று சப்தமுண்டாகும்படி பூரித்தலால் இது சீத்காரி என்னப்பட்டது. இதனுல் சரீரம் வலுக்கும், பசிதாகம் சோம்பல் நித்திரை நீங்கும்.

சீதலி—நாவின் நுனியை உண்ணுவில் சேர்த்து இரண்டு நாசியாலும் நீரை ரேசித்து நாக்கு தொண்டை இவற்றின் உதவியால் பூரித்துக் கும்பித்து இரண்டு நாசிகளாலும் மெதுவாகவிடுதல். இதை ஒரு மாதம் அப்பியசித்தால் பிராணவாயு வசப்படும். ஜுரம் ஜுரக்கட்டி முதலிய நோய் நீங்கும். பாம்பைப்போலச் சட்டையுரித்து அன்னுகாரமின்றி நெடுங்காலம் ஜீவிக்கும் சக்தியுண்டாகும். ஒரு வருஷம் பழகினால் ஆத்மதரிசனமும் செய்யலாம்.

பஸ்திரிகை—இடதுபாதத்தை வலது தொடையிலும் வலது பாதத்தை இடது தொடையிலும் மாற்றி வைத்துக்கொண்டு சரீரத்தை நிமிர்ந்திருக்கச் செய்து இரண்டு கைகளையும் முழங்காலில் வைத்துச் சின்முத்திரையுடன் சுழுமுனையில் பார்வையைச் செலுத்தி, ஒரு நாசியால் நீரை இழுத்துப் பூரித்து இரேசித்துப் பின் சூரியனால் பூரித்துச் சந்திரனால் விடுத்துப் பின் சந்திரனால் பூரித்துச் சூரியனால் விடுதல். இதனால் சரீரத்தைக் கனத்திருக்கவும் லேசாக இருக்கவும் செய்யலாம். பிரம விஷ்ணு ருத்திரன் என்னும் மூன்று கிரந்திகளையும் பேதிக்கலாம்.

பிராமரி—சுகாசனத்தி லிருந்துகொண்டு நாடிகளைப் பட படப்பாக ஓடச்செய்து உஷ்ணமுண்டாகாமற்படி சுவாசத்தை இழுத்து விடுத்து நாடிகளைப் படபடப்பாக ஓடச்செய்யவேண்டும். சரீரத்தில் சூடுண்டாகும்படி சுவாசத்தை விரைவாக இழுத்துவிடவேண்டும். பின்பு வியர்வை உண்டாய்ச் சரீரம் குளிர்ந்ததும் நாசித்துவார மிரண்டினாலும் நிதானமாக வாயுவை இழுத்துப் பின் விரைவாக இழுக்கவேண்டும். சரீரம் வியர்வையால் நனைகிறவரையிலும் சுவாசத்தை இழுத்துவிடவேண்டும். பின்னும் இரண்டு நாசிகளாலும் இழுத்துப் பூரித்துக் கும்பிக்கவேண்டும். பின் நிதானமாய் இரேசிக்கவேண்டும். இந்தக் கும்பகம் நெடுங்காலம் பழகப்பட்டால் அந்த யோகிக்கு முதுமை நீங்கி யௌவனமுண்டாகும். அஷ்டமாசித்திகளும் கைகூடும். பிறருக்குண்டாகும் வியாதிகளையுங் கையால் தொட்டு நீக்கலாம். மூர்ச்சை—சித்தாசனத்திலமர்ந்து மூர்ச்சை உண்டாகும் வரையில் கும்பிக்கவேண்டும். மெதுவாய் இரேசிக்கவேண்டும். இது சித்தித்தபின் இரு காதுகளையு மூடிக்கொண்டு கும்பகம் செய்யவேண்டும். அப்போது வலக்காதில் சப்தம் கேட்கும். அதை இடக்காதுக்குக் கேளாதவரையில் செய்து பழகவேண்டும். இதனால் மிருக வசிய முண்டாகும். மரணத்தையுந் தாண்டலாம். நினைத்த சித்திகளையும் அடையலாம். சகல கலைகளையும் ஓதாமலே உணரலாம். இதை இருபத்து நாலு வருஷம் அனுஷ்டித்தால் சரீரத்தில் பால்மயமாய் அமிர்தம் ஊறும். முப்பது வருஷம் அப்பியசித்தால் தேவசொரூபம் சித்திக்கும்.

பிலாவினி—சதா வாயுவால் வயிற்றை நிரப்பிக்கொண்டிருத்தல்—என்றால் எப்போதும் கும்பகம்கொண்டிருத்தலாம். இதனால் தண்ணீரின்மேல் தாமரை யிலையைப்போல மிதந்துகொண்டிருக்கலாம். இவையெல்லாம் பிராணுயாமமே. இவைகளை யோகப்பயிற்சியுள்ள மஹாத்மாக்கள் மூலமாகச் சந்தேகமறத் தெரிந்துகொண்டு அனுஷ்டிக்கவேண்டும். இல்லாவிடின் விபரீதப்பட்டுக் கெடுதி சம்பவிக்கும்.

ஆதாரதரிசனை—மூலாதாரமானது குதத்துக்கு இரண்டுவிரற்கடைக்கு மேல் தாமரைக்கிழங்கு வடிவமாயுள்ளது. சிவப்புவர்ணமுள்ள நாலு இதழ்களை யுடையது. சொர்ணமயமான வ பீ ஷ ஸ என்னும் அக்ஷரங்களை யுடையது. இந்தக்கமலத்தின் பொருட்டில் நாற்கோணவடிவாய் எட்டுச் சூலங்களாற் சூழப்பட்டதாய் மஞ்சள்வர்ணமுள்ளதான பூமண்டலம் இருக்கின்றது. இதன்மத்தியில் நாலுபுஜங்களுள்ளதாய் வஜ்ராயுதந் தரித்துக்கொண்டு ஐராவதத்தின்மேல் ஏறினதான பொன்னிறமுள்ள (ணம்) என்னும் பூமி பீஜம் இருக்கிறது. அந்தப் பீஜமாகிய விந்துவின்மத்தியில் நான்குமுகம் நான்கு புஜங்களுடன், தண்டகமண்டல அக்ஷமாலாதாரியாய் அபயமுடையராய், இரத்தவர்ணமுள்ள சிசுவடிவாகப் பிரமாவசிக்கிறார். இந்த இரத்த பத்மத்தில் இரத்தவர்ணமுள்ளவளாய் நான்கு புஜங்களுடன் சூலம், கட்வாங்கம், வாள், பாளபாத்திரம் என்பன தரித்த டாகினி சக்தி விளங்குகிறாள். இவளே அந்தச் சக்கரத்தை நடத்துகிற சகதி. கர்ணிகையின் மத்தியில் மின்னல் வடிவமாக முககோணம் விளங்கும். அதன்மத்தியில் காமலாயுவும் செந்நிறமான காமபீஜமும் இருக்கும். இதன்மேல் கறுததநிறமுள்ள சுயம்புலிங்க மிருக்கும். அதற்குமேல்தான் மூன்றரை வலயவடிவாய்க் குண்டலிசக்தி யிருக்கின்றது. அதன்மேல் லிங்கத்தின்மேல் தண்டாகாரமாகச் சிற்கலை யிருக்கின்றது. இந்த மூலாதாரத்தில் கணபதி யிருக்கிறார் என்றும் சில நூல்கள் கூறுகின்றன. பிராணாயாமத்தின் மகிமையால் இந்த மூலாதாரத்தைக் குரு திருவருளால் தரிசிக்கவேண்டும்.

மூலாதாரத்துக்கு இரண்டரை விரற்கடைக்குமேல் இலிங்கமூலத்தில் சுவாதிஷ்டான மிருக்கின்றது. இது அப்புஸ்தலம். மின்னலொளிபோன்ற விந்துவுடன் கூடிய வ ஸ ஃ ய ர ல என்கிற ஆறு அக்ஷரங்கள் பொருந்திய ஆறு இதழ்ச்சக்கரமாம். இவ்விதழ்கள் சிந்தூரவடிவுள்ளனவாம். அதன் கர்ணிகையில் அர்த்தசந்திரவடிவாய் எட்டுத்தளங்களுள்ள வெண்ணிற ஜல மண்டல மிருக்கின்றது. அதன்மத்தியில் (வம்) என்னும் அப்புபீஜம் இருக்கின்றது. மகரவாகனத்தின்மேல் பாசத்தைத் தரித்துக்கொண்டிருக்கும். அதன்மத்தியில் சதுர்ப்புஜங்களுடனும், சங்கு, சக்கரம், கதை, பத்மங்களைத் தரித்துக்கொண்டு விஷ்ணுமூர்த்தி யிருப்பர். பீதாம்பரம், வனமாலை, ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம் இவைகளைத் தரித்துக்கொண்டு கருடவாகனத்தின் மேலிருப்பர். யௌவன வடிவமுடையவரா யிருப்பர். அந்தப்பொருட்டின் மத்தியில் கரியநிறமும், நான்கு கைகளும், மூன்று கண்களு முள்ளவளாய்ப் பயங்கரமான உருவமுடையவளாய் வளைந்த பற்களை யுடையவளாய் ராக்கினி யென்னும் சக்தி யிருக்கிறாள். அந்தச் சக்கரத்தை நடத்துந் தேவதை யிதுவேயாம். வெள்ளையன்னம் ரக்ததாரை யிவைகளில் பிரியமுடையவள். சூலம் சங்கு உடுக்கை உளிகளைத் தரித்திருப்பள். இந்தச் சக்கரத்தில் இருக்கும் விஷ்ணுவைத் தரிசித்த யோகிக்கு ஒருபோதும் ஜலத்தினால் பயம் உண்டாகாது. அவன் அப்புபூதத்தை ஜயித்தவனாவான்.

மணிபூரகம்—நாபிஸ்தானத்திலுள்ளது. மேகவர்ணமுள்ள பத்துத் தளங்களை யுடையது. தளந்தோறும் முறையே ஜ ஞ ண த ய ஷ ய ந வ ஷ பத்து அக்ஷரங்களை யுடையது. அதன்மத்தியில் மூன்று சுவஸ்திகைகளோடு கூடிய திரிகோண மிருகின்றது. இதுவே அக்கினிமண்டலம். அதன் மத்தியில் (ΓΤο) என்னும் அக்கினிபீஜ மிருக்கின்றது. நான்கு புயங்களுள்ளது. வரம், அபயம், வஜ்ரம், சக்தி என்பன தரித்து மேஷவாகனத்தில் வீற்றிருக்கும். அந்தப் பீஜத்தில் செந்நிறமுடையவராய் இரண்டு புஜங்களுடன், வரதம் அபயமுடையவராய், வெண்ணீறும் வெண்மையான ஆபரணமணிந்தவராய், விருத்தரான ருத்திரமூர்த்தி ரிஷபவாகனத்தில் வீற்றிருப்பர். இந்தக் கர்ணிகையில் சிவந்ததாமரையில் மூன்றுமுகம் மூன்று கண்கள், நான்கு புயங்களுள்ளதும், கோரப்பற்களையுடையதும், நீலவர்ணமுள்ளதும், வஜ்ரம் சக்தி வரம் அபயம் என்பன தரித்து மானலாகினி என்னும் சகதியிருக்கின்றது. இந்தச் சக்திக்கு இரத்ததத்தோடுகூடிய தேகரான்னம் மாமிசம் இவற்றில் பிரியமாம். இந்தச்சக்கரத்தையும் இதில் விளங்கும் ருத்திரபகவானையும் கண்டு தரிசித்த யோகி அக்கினிபூதத்தை ஜயித்தவனாவான். அவனுக்கு அக்கினியால் ஒருபோதும் பயம் நேராது.

(தொடரும்.) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.




## பன்னீர் செய்யும் முறை.

ரோஜா மலரின் சாரம் இறக்குவதற்கு ஹேதுவான கருவி மிகவும் சொற்பமான முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. உறுதியாக ஈயம் பூசப்பட்டதும் 8-முதல் 12-காலன் வரையில் தண்ணீர் கொள்ளும்படியானதுமான செம்பு அல்லது இரும்பால் செய்யப்பட்ட கொப்பரை (Boiler) ஒன்றுண்டு. அந்தக் கொப்பரையானது பருத்த உடற்பாகமும் குறுகிய கழுத்தோடுங்கூடியதாயிருக்கும். அக்கழுத்தின் வாய் குறுக்களவில் 8-அங்குல நீள முள்ளது. இந்த வாயின்மீது பன்னீர் இறக்கும் மற்றொரு சிறு கொப்பறையின் தலைப்பு திடமாக இணைக்கப்பட்டிருக்கிறது. இச சிறு கருவி நாம் சமையல் செய்யும் பாத்திரத்தைப்போல மிகவும் சொற்பமானது. இதனடியில், நீராவிசெல்லும் முறுக்குக் குழாய் நுழையும்பொருட்டு ஓர் சிறு துவாரம் விடப்பட்டிருக்கிறது. இக்குழாய் குறுங்கோணமாயமைந்த இரு சிறு மூங்கில் துண்டுகளின்மேல் சுற்றப்பட்டு அதன்மேல் முறுக்கப்பட்ட கயிற்றால் இடைவிடாது சுற்றப்பட்டிருக்கும். இம் முறுக்கிய கயிற்றின்மேல்

ஆவி வெளிச்செல்லாமற் றடுக்க மிருதுவான மண்பூச்சு கொடுக்கப்பட்டு மிருக்கும். அம்மூங்கிலின் சுமார் இரண்டடி நீளமுள்ள மேல்நுனி அக் கொப்பரையிலுள்ள சிறு துவாரத்திற்கு நேராக வெளியில் நின்று ஆவி வெளிப்படாவண்ணம் மாவாலும் நீராலும் அமைக்கப்பட்டிருக்கும். அதன் மற்றொரு முனை நீளமான கழுத்துப்போன்ற பாகமுடைய பாத்திரத்தினுட் சென்றிருக்கும். அது கொள்கலத்தை அடைந்திருக்கும். அப்பாத்திரத்தி லுள்ள தண்ணீர் உஷ்ணப்படுத்தப்படுங்கால் மாறுந்தன்மையைப் பெறுகின் றது. அக்கருவியின் தலைப்பாகம் முதல் அடிப்பாகம் வரை மிருதுவான மண்ணாலும், துணியாலும் அதிக ஜாக்கிரதையாக மூடப்பட்டு ஆவி வெளிச் செல்லாவாறு காப்பாற்றப்பட்டிருக்கிறது. இத்துணை ஏற்பாடுடன் கூடிய பன்னீர் ஆக்குங்கருவி சாதாரண மண்ணடுப்பில் வைக்கப்படுகின்றது.

இக்கருவியிலுள்ள கொப்பரை எட்டுமுதல் பத்துப்பன்னிரண்டாயிரம் ரோஜாமலர்கள் கொள்ளக்கூடியதாயிருக்கும். தொழிலாளர் எண்ணாயிரம் ரோஜாப் புஷ்பங்களில் பத்து அல்லது பன்னிரண்டுசேர் தண்ணீர் வார்த்து எட்டுச்சேர் பன்னீர் எடுப்பார்கள்; பன்னீர் எடுபட்டபின் அதை 'கார்பாய்' என்னும் ஒருஜாடி யுருவுள்ள கண்ணாடிப் பாத்திரத்திலிட்டு வெயிலில் நன் றாகக் காய்ந்து பதமடையுமாறு வைப்பர். சூரிய வெப்பத்தில் வைக்கும் பொழுது அதன் வாசனை குறையாதவாறு பஞ்சால் மூடி அதன்மீது ஈரமான களிமண் அடைத்து வைக்கப்படும். உயர்தரப்பன்னீர் ஒருசேர் தண்ணீருக்கு 1000-மலர் வீதம் சேர்த்துக் காய்ச்சப்படும்.

பன்னீர் அத்தர் செய்வதற்கு மலர்கள் இயந்திரத்திலிடப்பட்டுப் பன்னீர் செய்யப்படும் முறையைப் போன்றே தண்ணீர் சேர்க்கப்படும். நேர்த்தியான பன்னீர் கிரஹிக்கப்பட்ட பின்னர் அதை ஓர் பெருங்கிண்ணத்தில் எடுத்து, அக்கிண்ணத்திலுள்ள பன்னீரில் பூச்சி புழுக்கள் விழாவண்ணம் பட்டால் மூடி, தரையில் இரண்டடி ஆழமுள்ள ஓர் குழிவெட்டி, அக்குழியை முன்னரே ஈரமாக்கி அக்கிண்ணத்தை அதில் வைத்துவிடவேண்டும். ஒரு இரவு முழு தும் அக்குழியில் கிண்ண மிருக்கவேண்டும். (இம்முறை முக்கியமாக இராக் காலத்தில் குளிர் அதிகரித்திருக்கும் மாதங்களிலேயே அனுசரிக்கத்தக்கது). பொழுது புலருமுன் இக்கிண்ணத்தைத் திறந்து பார்த்தால் பன்னீரின்மேல் அத்தர் படர்ந்திருக்கும். தொழிலாளர் அதை ஓர் நயமான இறகுகொண்டு மெதுவாகப் பிரித்தெடுத்து வைத்துக்கொண்டு—இவ்வாறே அத்தரைச் சேகரித்துச் சிறிது சூரியவெப்பம் படவைத்து டப்பிகளில் அடைத்து ஒரு வாரகன் இடை சேர்ந்தபின் சுத்திசெய்து அம்பர் சேர்த்து விற்க அனுப்பு கின்றனர். இரண்டு மூன்று நாட்கள் சேகரிக்கப்பட்ட சுத்தமான அத்தர் (ரோஜா அத்தர்) இலேசான பச்சை நிறமுள்ள மெழுகுபோன்றிருக்கும். அவ் வாறே வைக்கப்பட்டால் சிலவாரங்கள் கழிய அதன் பசுமை வர்ணம் மாறி மங்கலான மஞ்சள்நிற முடையதாகும். அத்தொழில் நிபுணர்கள் ஒரு இலக்ஷம் ரோஜா புஷ்பங்களைக்கொண்டு ஒருதோலா உயர்ந்த அத்தர் செய்யப்படலா மெனக் கூறுகின்றனர். வியாபார தந்திரசாலிகள் அத்தருடன் சந்தனத்

தைச் சேர்த்து விற்கின்றனர். சந்தனத்துடன் கலந்து விற்கப்படுவது சுத்தமான அத்தராகாது. (இண்டஸ்டிரி.)

## சந்தனாதித் தைலம்.

சந்தனாதித் தைலத்தின் உபயோகத்தையும் உயர்வையும் அறியாதார் நவீன உலகில் வெகு சிலரேயாவர். நல்ல வாசனையும் குளிர்ச்சியும் பொருந்தியது இத்தைலம். பாரதபூமியில் ஒரு சிறு சந்தனக்கட்டைத் துண்டாவது இல்லாத இல்லமே இல்லையெனலாம். பூஜை, கிரியாம்சமான சந்தர்ப்பங்களிலும், விவாகம், தேக்கச்சேரி முதலான கொண்டாட்ட இடங்களிலும் சந்தனமே முன்னர் வழங்கப்படுகின்றது. சந்தனத்தின் உபயோகம் புராதன காலத்திலிருந்தே தொடர்ந்து வருகின்றது. சாலமன் அரசன் காலத்தில் சந்தனம் வழங்கப்பட்டது மேனாட்டுச் சரித்திரத்தினின்றும் விசதமாம். ஆராதனக்கிரமத்திலும் கந்தத்துவாரா (வாயிலாக) கடவுள் வழிபாடு கூறப்படுகின்றது.

அலங்காரமான மலைப்பிரதேசங்களில் சந்தனமரங்கள் அடர்ந்திருக்கும். தென்னிந்தியாவில் குடகு, மைசூர், கொல்லிமலைப் பிரதேசம் முதலான இடங்களில் சந்தன விருக்ஷங்கள் உயர்ந்தோங்கி வளர்கின்றன. இம்மரத்தைக்கொண்டு சொற்ப மூலதனமுடையவர்கள் நல்ல லாபமடையலாம். இந்தியாவின் இயற்கைப் பிரதேசங்களில் நிறைந்து கிடக்கும் சந்தனம் போன்றவற்றைக்கொண்டு சமூகத்திற்குத் தேவையான பண்டங்களைச் செய்து நமது சிறு கைத்தொழில்களை நாம் விருத்திசெய்தாலன்றி நமதுநாடு முன்னேற்றமடையவியலாது. நமது செல்வத்தைப் பிறநாட்டாரிடம் செல்லாவண்ணம் நாம் பாதுகாக்க விரும்பினால் இன்றே புதிய கைத்தொழில்களைத் தொடங்கவேண்டுவது அத்யாவசியமாம்.

இந்தியர்கள் எப்பொழுதும் மேல்நாட்டு முறைகளில் ஆழ்ந்து தாழ்ந்து வறுமை சூழ்ந்து நிற்கின்றனர். இந்தியாவில் செய்யப்படும் சந்தனாதித் தைலத்தையும் அதன் அவசியத்தையு முணர்ந்த தந்திரசாலிகளான மேல்நாட்டார் அத்தைலத்தைச் செய்து குறைந்த விலைக்கு அனுப்ப ஆரம்பித்து விட்டனர். இவ்விதம் ஜப்பானியரும், ஜர்மானியரும் சந்தனாதித்தைலக் கைத்தொழிலைச் செய்து வருகின்றனர். செழுமையான மரங்கள் மிக விருந்தும் இந்தியாவில் மைசூர், பெங்களூர் ஆன இரண்டு இடங்களிலுமுள்ள தொழிற்சாலைகளில் வருஷாவருஷம் 800 (டன்) எடையுள்ள மரமே தைலமெடுக்க உபயோகப்படுத்தப்படுகின்றது. ஆனால் மைசூர் சமஸ்தானத்தின் ஆதரவில் நடைபெற்றுவரும் பெங்களூர் கைத்தொழிற் சாலையினர் சுதேச ரசாயன ஆராய்ச்சியில் அதிக ஊக்கங்கொண்டுள்ளார்.

S. V. வரதராஜய்யங்கார், சரஸ்வதி நிலயம், உறையூர்.

---

## பிழை திருத்தம்.

பிரபவஹு ஆனிமீ வெளிவந்த நமது ஆனந்தபோதினி சஞ்சிகை 575-ம் பக்கம் 'பிரபஞ்ச அனுபவம்' என்னும் தலையங்கத்தின்கீழ் 'கிணற்றுநீர் குளிர் காலத்தில் மிகக் குளிர்ச்சியாயும், கோடைகாலத்தில் மிகவும் வெதுப்பாயும்' என்று தவறுதலாகப் பிரசுரித்திருப்பதை 'கிணற்றுநீர் வெயிற்காலத்தில் மிகக் குளிர்ச்சியாயும், குளிர்காலத்தில் மிகவும் வெது வெதுப்பாயும்' என்று திருத்தி வாசிக்கவும்.

ப-ர்.



# மாணவர்பகுதி

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(556-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "குணமது கைவிடேல்"

"குணமது—(நல்ல) குணத்தை, கைவிடேல்—(நீ) கைவிடாதே" என்பது இதன்பொருள்.

மனிதர், தருமநூல்களிற் கூறிய நீதிகளின்படி அடக்கம், செய்ந்நன்றியறிதல் முதலியவற்றைக்கொண்டு நடத்தலே நல்ல குணமாம்; அவற்றினின்றுந் தவறி நடப்பது கெட்டகுணமாம். நல்ல குணத்தைக்கொண்டிருப்பவர் எப்பொழுதும் நன்மையே அடைவர்; கெட்ட குணத்தைக்கொண்டவர்கள் கேடடைவர். இவ்வாறு நற்குணத்தைக் கைவிட்டவர்கள் கேடுற்ற கதைகள் சிலவுண்டு: அவற்றில் ஒன்று இதனடியில் வருவதாம்.

ஓர் ஏழைக்குடும்பத்தில் மலையப்பன் என்னும் ஒரு சிறுவன் இருந்தான். அவன் வறுமையால் மெலிந்தவன். பள்ளிக்கூடத்தில் வாசித்துக்கொண்டிருந்தான். பணக்காரர் ஒருவர், தம்முடைய பெண்ணுக்கு அவனை மாப்பிள்ளையாக்கக்கருதி அழைத்துப்போய் வீட்டோடு சேர்த்து அவனுக்கு உயாந்த உடைகள் தைத்துக்கொடுத்து நல்ல சாப்பாடும்போட்டு ஆங்கிலமும் கற்பித்து வந்தார். தரித்திரத்தில் மூழ்கிக்கிடந்த அவனுக்கு இந்தச் சௌகரியங்கள் ஏற்படவே மிகுந்த தற்பெருமை யுண்டாயிற்று. அவன் எவரையும் மதிக்காமல் பேசத்தொடங்கிவிட்டான். கல்விகற்ற பெரியோர் வார்த்தைகளையும் எடுத்தெறிந்துபேசி, அவர்களோடு வீண் வாக்குவாதம் செய்துவந்தான்; அவ்வீட்டிலுள்ள பெண்களிடத்திலும், வேலைக்காரரிடத்திலும் அதிகாரம் செலுத்தினான். தனக்குத் தெரியாத காரியங்களிலும் தலையிட்டு எல்லாம் தெரிந்தவன்போல் நடக்க ஆரம்பித்தான். காரியங்களில் அனுபோகமுள்ள அறிஞரிடத்திலும், 'உங்களுக்கொன்றும் தெரியாது' என்று அவர்களைத் தாழ்த்திப் பேசுதலை மேற்கொண்டான். முடிவில் தன்னை ஆதரித்துத் தனக்குப் பெண் கொடுக்க நினைத்திருக்கும் அந்தத் தனவந்தரையும் அவமதிக்கத்தொடங்கி, ஒருநாள் பெண்கள்கூட்டத்தின் மத்தியிலிருந்து தன்னை அவர்கள் மதிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன், "அவருக்கென்ன தெரியும்? அவர் கருநாடகப் பேர்வழி; துணிகூடச் சரியாகக் கட்டமாட்டார்; நான் வந்தபிறகல்லவா இந்த வீட்டுக்காரியங்கள் ஒழுங்காயின; நான் மாத்திரம் இங்குவந்து சேராதிருந்தால் இந்த வீடு வீடாகத் தெரியுமா? சுடுகாடாகவல்லவாதெரியும்; இங்கே நாகரிகமுடைய மனிதர் எட்டிப் பார்ப்பாரா?

அவருடைய நற்காலமே என்னை இங்குக்கொண்டுவந்து சேர்த்தது" என்று கையோடு கையறைந்து பேசிக்கொண்டிருந்தான்.

அப்போது அவ்வீட்டுக்காரர் மறைவில் நின்று அவன் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தார். அவனுடைய அகங்கரிப்பான பேச்சுக்களைக் கேட்கவே அவருக்கு அளவில்லாத கோபமுண்டாய்விட்டது. அதனால் அவர், "ஒகோ! கஞ்சியும் கிடைக்காமல் கண்கலங்கித் திரிந்த இவனுக்கு நல்ல உணவும் உடையும் அகப்படவே இரத்தமூறி அகங்காரம் அதிகரித்துவிட்டது; குப்பையிற் புரளும் நாயை மெத்தையில் படுக்கவைத்தால் அது எல்லோரையுமே அவமதித்துக் குலைக்கும்; இவனுக்கு முன் நிலைமையே தக்கது; இவனைத் துரத்திவிட்டு மறுவேலை பார்க்கவேண்டும்" என்று உடனே அவனெதிரில் போய், "என்னடா பயலே! உன்னாலா எனக் குயர்வுண்டாயிற்று?" என்று அவனைக் கேட்டார். அவன் "ஆம்; நான் இங்கிருந்து ஆங்கிலங் கற்றுத் துரைமார்களைப்போல் உடையணிந்து உலவுவதனாலேயே உமக்குச் சிறப்புண்டாயிற்று; நானில்லாவிட்டால் உம்மை நாய்கூடச் சட்டைபண்ணமாட்டாது" என்று வெகு முறுக்காய்ப் பேசினான். அவர் பல்லைக் கடித்துக்கொண்டு, "தரித்திரம்பிடித்த சண்டிப்பயலே! என்னுடைய பணமல்லவா உன்னை இவ்வாறு பேசச் செய்திருக்கிறது; உன்னுடைய செருக்கை நீ வெளியிற்சென்று காட்டு பார்க்கலாம்" என்று அவனுக்கு நான்கு சவுக்கடி கொடுத்து அப்பொழுதே அவனைத் துரத்திவிட்டார். மறுநாளே அவனுக்குச் சோற்றுக்கு வழியில்லாமற் போயிற்று. மீண்டும் அவன் தரித்திரத்தால் வருந்தித் தயங்கினான்.

(தொடரும்.) சேம்பூர். வீ. ஆறுமுகஞ்சேர்வை.

## பெஞ்சமின் பிராங்க்லினின் குணாதிசயங்கள்.

பெஞ்சமின் பிராங்க்லினின் சரித்திரம் உறங்கிக் கிடக்கும் மனதைத் தட்டியெழுப்பும் தன்மையுடையது; படிக்கப் படிக்கத் தெவிட்டாத பான்மையது; புது ஊக்கத்தையும், புதிய உற்சாகத்தையும் அளிக்க வல்லது. 'முயற்சி திருவினையாக்கும்' என்பதை நன்கு நிரூபிக்க பெஞ்சமினின் சரித்திரம் உபயோகமானது.

பெஞ்சமின் 1706-ம் வருஷம் ஜனவரி௴ 6௳ ஜோஸியா பிராங்க்லின் என்பவருக்கும், அபியாபால்கர் என்னும் அவரது இரண்டாவது மனைவிக்கும் பத்தாவது குழந்தையாக வட அமெரிக்காவிலுள்ள போஸ்டன் நகரில் பிறந்தார். இவர் தாய் தந்தையர் மிக்க ஏழைகளானபடியினால் அவர்கள் பெஞ்சமினைப் பத்துவயதிற்குமேல் படிக்கவைக்க முடியாதவர்களாயினர். ஆயினும் பெஞ்சமின் தம் விடாமுயற்சியால் கல்வி பயின்று உலகம்

மெச்சும் உத்தமராய்த் துலங்கினார். இது நம்தேசத்து மாணவர்கள் கவனித் துணரத்தக்கது.

பெஞ்சமின் தம் சிறுவயதிலேயே பொதுநலப்பிரியரா யிருந்தாரென்பதற்கு ஓர் அத்தாக்ஷி காண்கிறது: சேறு நிறைந்த குட்டையிலிறங்கி மீன் பிடித்த அநேகர் அவதிப்பட்டதையறிந்த பெஞ்சமின், தம் தோழரைத் துணைசேர்த்துக்கொண்டு ஒருவர் வீடுகட்ட நிமித்தம் வாங்கிப்போட்டிருந்த கற்களை வாரி அக்குட்டையில் போட்டு மீன் பிடிப்போருக்கு இதம்செய்து மகிழ்ந்தார். இவர், முதலில் வேறொருவருடைய கற்களை வாரிப்போடுவது குற்றமென்றுணரவில்லை. பின்னர் இவரது தந்தை யுணர்த்தியதனால் அறிந்து அவரிடம் அதற்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

இவருக்குப் படிப்பிலிருந்த பிரியம் இவ்வளவு அவ்வளவு அன்று. தாகமுடையவனுக்குத் தண்ணீரில் எவ்வளவு பிரிய மிருக்குமோ, அவ்வளவு விருப்பம் பெஞ்சமினுக்குப் புத்தகத்தின்மே லிருந்தது. அப்படியிருந்தும் இவர் பத்துவயதிற்குமேல் பள்ளியில் படித்தல் முடியாமற் போயிற்று. அவ்வாறானது இவரது துரதிர்ஷ்டமென்றே சொல்லவேண்டும். இக்காலத்திலும் தனவந்தருடைய பிள்ளைகள், கல்வியை வேப்பங்காயைப்போல வெறுத்து விருதாகோஷ்டியுட னலைவதையும், ஏழை படிக்க அவாவுற்றும் பணமின்றித் தவிப்பதையும் நாம் கண்கூடாகக் காணலாம். இஃதிக்கலிகால வியற்கையேயாம்.

பெஞ்சமின் அதிகம் கற்க முடியாமற் போகவே அதன்மேல் கல்விச் சாலை செல்வதைவிட்டுத் தம் தமையனின் அச்சியந்திரசாலையில் அச்சுக் கோக்கும் வேலையிலமர்ந்தார். அக்காலத்தில் இவர் பகலெல்லாம் வேலை செய்துவிட்டு இரவில் நெடுநேரம் கண்விழித்து நல்ல புஸ்தகங்களைப் படித்து வந்தார். புத்தகங்களில் சிறிதும் அழுக்கேறவிடாமல் அவற்றை விசேஷ சிரத்தையுடன் காப்பாற்றி வந்தார். இஃதொன்றே பெஞ்சமினின் கல்வியாவலைத் தெற்றெனை விளக்கும்.

பெஞ்சமின் அதன்மேல் எவ்வளவோ கஷ்ட நிஷ்டூரங்களையும், கடவுள் சோதனைகளையும் அநுபவித்துத் தமது 23-வது வயதில் ஓர் பத்திராதிபராகும் பெருமையினை யடைந்தார். அப்பத்திரிகையின் முதலிதழ் 1729-ம் வருஷம் அக்டோபர்மீ 2உ வெளிவந்ததெனச் சரித்திரங் கூறுகிறது. அப்பத்திரிகையில், அக்கிரமங்கள் செய்வோர் எத்தகையினராயினும் நடுநிலைமையில் நின்று, அவர்களுடைய துர்நடக்கைகளை இவர் அஞ்சாது வெளியிட்டு வந்தார். ஒருகாலத்தில் பிலடல்வியாவி லிருந்த சில பிரமுகர்களின் நியாய விரோதமான விஷயங்களை, தைரியமாகத் தம் பத்திரிகையில் வெளியிட்டார். அதைக்குறித்து இவர் நண்பர்களிற்சிலர் இவரிடத்தில், “இது சரியல்ல; பெரியோரின் பகை வயிற்றுப் பிழைப்பிற்கே கேடாக முடியும்” என்று உரைத்தனர். அதைக்கேட்ட பெஞ்சமின் அவர்களுக்கு யாதொரு பதிலுங் கூறாது, ஒருநாள் அந்நண்பர்களை விருந்துக்கழைத்து, அவர்களுக்கு வாய்க்கு

வழங்காத கேழ்வரகு ரொட்டியையும், குடிதண்ணீரையும் கொண்டுவந்து வைத்தார். அவர்கள் அங்கே உயர்ந்த ஆகாரம் கிடைக்குமென்று எதிர் பார்த்திருந்தார்கள்; ஆதலின் அந்தத் தாழ்ந்த ஆகாரத்தைக் கண்டதும் வியப்புற்று, தின்னமுடியாமல் விழித்தனர். பெஞ்சமினே அவ்வாகாரத்தை அதிக விருப்பத்துடன் உண்டுவிட்டு அவர்களைநோக்கி "நேயர்களே! இக் கேவல உணவை உட்கொள்ளும் நான் உண்மையுரைத்து உயர்ந்தோரின் பகைவந்தகாலத்தும் எவருடைய ஆதரவின்றியும் பிழைத்துக்கொள்வேன்" என்றார். பெஞ்சமினின் புத்தி சூக்ஷ்மத்தையும் உத்தமசிந்தையையும் உணர்ந்தீர்களா?

இன்னும் பெஞ்சமின், தாம் எவருக்கும் எவ்வகையிலும் இன்னல் விளைப்பதில்லையென்னும் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்தாராம். இது எத்தகைய மேலான விஷயம்? இன்னும் இவர் காலத்தைப் பாகுபடுத்தி வீணாக்காமல் உபயோகித்து வந்தார். காலை ஐந்துமணிக்கு எழுந்து ஏழு மணிக்குள்ளாக காலைக்கடன் தீர்த்தல், பகவத் பிரார்த்தனை செய்தல், பகலில் செய்யவேண்டிய காரியங்களை நிர்ணயித்தல், படித்தல், போஜனம் பண்ணுதல் ஆகியவைகளை முடித்துக்கொள்வதென்றும், எட்டுமணிமுதல் பதினொருமணிவரையில் தொழில் செய்வதென்றும், பனிரண்டுமணிமுதல் ஒருமணிவரையில் படித்தல், வரவு செலவு கணக்குப் பார்த்தல், மத்தியான போஜனம் செய்தல் ஆகியவற்றை நிறைவேற்றுவதென்றும், இரண்டுமணி முதல் ஐந்துமணிவரையில் மறுபடியும் தொழில் செய்வதென்றும், ஆறுமணி முதல் இராத்திரி ஒன்பதுமணிக்குள்ளாக வஸ்துக்களை அவ்வவற்றிற்குரிய விடங்களில் வைத்தல், இராத்திரி போஜனம் செய்தல், சங்கீதம், வேடிக்கை, விநோதம், அல்லது சம்பாஷணை இவற்றில் பொழுது போக்கல், அன்றைய சம்பந்தமாய் ஆத்மபரீக்ஷை செய்தல் முதலியவற்றை முடித்துக்கொள்வதென்றும், இரவு பத்துமணியிலிருந்து காலை நான்குமணிவரையில் நித்திரை செய்வதென்றும் தினசரி வேலைத்திட்டங்களை வகுத்துக்கொண்டு அவ் விதமே நடந்து வந்தாராம். இவ்வழக்கம் எவ்வளவு சிலாக்கியமான விஷயம் என்பதை ஒவ்வொருவரும் அறியவேண்டும். இவருடைய இப்பழக்கத்தை யநுசரித்து நாமும் நேரங்களையும் வேலைகளையும் வகுத்துககொண்டு அவ் வண்ணமே ஒழுகிவரின் உத்கிருஷ்டமான வாழ்க்கையை அடையலாம்.

பெஞ்சமின் பிராங்க்லினிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய முக்கிய விஷயம் அவரது சலியா முயற்சியேயாகும். இவர் தம் சிறுபருவத்தில் கல்வி கற்கப்போதிய சாதனம் எதுவுமில்லாதிருந்தும், இவர் கல்விகற்ற விதம் மிகவும் அதிசயிக்கத்தக்கதே. வறுமையும், கஷ்டமும் தம்மைப் பிணித்தும் மனம் சலிப்புறாமல், ஊக்கத்துடன் கல்வியைக் கற்று மேதாவியென யாரும் புகழத்தக்க மேன்மையுற்ற பெஞ்சமினின் சரித்திரம் மாணவர்க்குக் கர்ணாமிர்தமாம். படிப்பினாலேயே மனிதன் உயர்நிலை பெறலாம் என்பதை பெஞ்சமின் தம் சரித்திரத்தால் நன்கு விளக்கிச் சென்றனர். உழைப்பின் வாரா உறுதிகளுளவோ?

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (குமரகுருபரர்.)

T. S. குழந்தைவேலன், திருவானைக்கா.



# வைணவம்

## "பெரியோர் இலக்கணம்"

ஸ்ரீ விசிஷ்டாத்வைத சித்தாந்த ஸ்தாபகராக எழுந்தருளியிருந்த உடையவரது முக்கிய சிஷ்யரான அனந்தாழ்வார் என்னும் பெரியாரொருவர் 'அடைபவர் தீவினைமாற்றி அருடரும்' திருவேங்கடமெனும் திருமலையில் பகவானுக்கு கைங்கர்யம் செய்துகொண்டிருந்தார். அவ்வேளையில், பட்டர் எனும் ஆசார்யர் ஒருவரின் சீடர் ஒருவர், திருமலையடைந்து 'ஸ்ரீ வைஷ்ணவ லட்சணம்' எப்படிப்பட்டது?' என்று அவ்வனந்தாழ்வாரைக் கேட்டலும், அவரும் அதனை அறிவிக்கின்றேமென்றுகூறி, ஆறுமாத காலமாக தம்மிடத்தில் அவரை இருத்திக்கொண்டார். அதுவரை அனந்தாழ்வார் திருமாளிகையிலேயே பணிசெய்துவந்த அச்சீடர், தமது வினவுக்கு பதில் கிடைக்கும் நாள் என்நாளோ என்று, எதிர்பார்த்துக்கொண்டு வந்தார். ஓர்நாள் அவ்வில்லத்தில் சில பெரியோர்கள் அமுதுசெய்யுமளவிலே, அனந்தாழ்வார் அச்சீடரை ஓரிடத்திலிராதபடி பெயர்த்துப் பெயர்த்துப் பின்னடியிலும் இடம் போதாதென்று கிளப்பி அதன் பின்னடியிலே இருமென்று வைத்தலும், அவரும் சற்று மனவருத்தமின்றி, மிக்க பொறுமையுடனும் மகிழ்வுடனும் பொழுதுபோகும் வரையில் உண்ணாது காத்திருந்தார். அவரது பொறுமைகண்டு அகம் மகிழ்ந்த அனந்தாழ்வாரும், அச்சீடரைத் தம்முடன் வைத்துக்கொண்டு அமுதுசெய்து, அவரைநோக்கி "நீர் இவ்விடம் போந்து நெடுநாளாயிற்று. இனி, உமது ஆசிரியர் பட்டரிடம் செல்வீராக" என்று கூறி, ஸ்ரீ வைஷ்ணவ லட்சணமாவது,

1. கொக்கைப் போலிருக்கும்;
2. கோழியைப் போலிருக்கும்;
3. உப்பைப் போலிருக்கும்;
4. உம்மைப் போலிருக்கும்;

என்று உபதேசித்து, விடைகொடுத்தனுப்பினார்.

அப்பொன்மொழிகளின் பொருளறியாத அச்சீடர் தமது ஆசிரியராய பட்டரை அடைந்து, அவற்றின் உட்பொருளை உணர்த்தியருளுமாறு வேண்டி நின்றார். அவரும் பின்வருமாறு அருளிச் செய்வாராயினர்:—

### 1 கோக்கைப்போல இருத்தலாவது.

"கொக்கு, மிக்க வெண்மைநிறமாக இருப்பதுபோல ஸ்ரீ வைஷ்ணவன் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் கள்ளமின்றி, தூய்மைமிக்க உள்ளத்தை உடையவனாக இருப்பான். மற்றும், அப்பறவை குளம் முதலிய விடங்களில் பொறுமையோடு காத்திருந்து சிறிய மீன்கள் கரைக்கு வரும்போதெல்லாம் அவற்றைப் புறக்கணித்து, தனக்கு விருப்பமான பெரியமீன் கரையை அணுகியவுடனே, சடக்கெனக் கவ்விக்கொள்ளும் இயல்புடையது. அதுபோல, வைணவனும் தனது வாணாளில் நண்பர், உறவினர் முதலிய பலரோடுங் கலந்து பழக நேர்ந்தாலும், புளியும், அதன் ஓடும் போன்றும், தாமரையிலைத் தண்ணீர்போன்றும் அத்தகையவரோடு கலந்தும் கலவாது வாழ்ந்திருந்து, தன்னை உய்விக்கும் உத்தமரான சற்குரு வந்து தோற்றப்படில், அவரது சரணாரவிந்தங்களையே உபாயமாகப் பற்றிக்கொண்டு ("செவிக் குணவில்லாத போழ்து—சிறிது—வயிற்றுக்கு மீயப்படும்"—என்ற குறளுக்கிணங்க) வயிற்றுக் குணவு அளித்தலினும், செவிக்கு விருந்தளித்தலே

சிறந்ததென்பதை உணர்ந்து, அவ்வாசிரியரிடத்திலிருந்து, 'உயிர்க்கு உறுதி பயக்கும்' உண்மைப்பொருள்கள் பலவற்றையும் கேட்டு, நன்னெறி மேற்கொண்டு ஒழுகுவான்.

## 2. கோழியைப்போல இருத்தல்.

கோழியானது குப்பையைக் கிளறி, தனக்கு உணவாகக் கிடைப்பனவற்றை எடுத்துக்கொண்டு, தானும் உண்டு தனது குஞ்சுகட்கும் ஊட்டும் இயல்புடையது. அதுபோல, ஸ்ரீ வைஷ்ணவனும் பலவித குழப்பங்களை விளைவிக்கும் சாத்திரக் குப்பைகளைத் துருவியாராய்ந்து துன்பப்படாது, நான்மறைகளிலுள்ள அரும்பொருள்களை விவரிப்பனவும், மனதிற்குத் தெளிவான பொருள்களைப் போதிப்பனவும், பக்தியை ஊட்டுவனவுமாய திருவாய்மொழி முதலிய தமிழ் வேதங்களை ஓதி, அவற்றின் அர்த்த விசேஷங்களை அறிந்து தானும் ஆனந்தித்துப் பிறருக்கும் உபதேசித்து உள்ளம் உவப்பான்.

## 3. உப்பைப்போல இருத்தல்.

உப்பானது, ஒரு பதார்த்தத்தில் கலக்கப்பட்டபோது, தான் கரைந்து போய்விட்டாலும், அப்பதார்த்தத்தை உருசியுள்ளதாக்குகின்றது. மற்றும், தான் அழிய மாறியும் தன்னை உபயோகிப்பவர்கட்கு உவப்பை அளிக்கும். அதன் உருவமே அழிந்து, அப்பதார்த்தத்தில் இரண்டறக் கலந்துபோய் விடும். அதுபோல, ஸ்ரீவைஷ்ணவனும் ஆடம்பரவாழ்வைத் துறந்து, தன்னை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் அடக்கமாக வாழ்ந்துவந்தாலும், தனது சீடர்கள் பெரும்புகழ்பெற்று விளங்குவதற்குக் காரணமாயிருப்பான். (பெரிய நம்பிகளையும், அவரது சீடர் உடையவரையும், ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸரையும், அவரது சீடர் விவேகானந்த சுவாமிகளையும் நினைவு கூர்க.) மற்றும், தான் பல துன்பங்களை அனுபவித்தாலும், தன்னைச் சார்ந்தவர்களிடத்தில் மிக்க சந்தோஷமாகவே நடந்துகொள்வான். இவ்வாறு, கீர்த்தியையும் ஆடம்பரத்தையும் விரும்பாமல் ("பெருக்கத்துவேண்டும் பணிதல், சிறிய—சுருக்கத்துவேண்டும் உயர்வு"—என்ற குறளுக்கிணங்க) 'யான் எனது' என்னும் செருக்கை ஒழித்து, இறுதியில் இறைவனோடு இரண்டறக்கலப்பான"—என்று பொருள் விளக்கி யருளினர்.

பின் பட்டரும் அச்சீடரை நோக்கி, அனந்தாழ்வார் திருமாளிகையில் நடந்த செய்தியைக் குறித்து வினவுதலும், அவரும் அங்கு நிகழ்ந்தனவற்றை விவரமாக விளம்பினர். அதன்பின், பட்டரும் கீழ்வருமாறு பகரத் தொடங்கினர்:—

## 4. உம்மைப்போல இருத்தலாவது :

" உம்மை அவ்விடத்தில் போஜனகாலத்தில், ஓரிடத்திலிராவாறு இடம் விட்டு இடமாகப் பலவிடங்களிலும் பெயர்த்துப் பெயர்த்து அலக்கழித்தும், கொஞ்சமும் மனவருத்தமின்றி மிக்க மகிழ்ச்சியோடும் பொறுமையோடும், நீர் பொழுதுபோகும் வரையில் காத்திருந்தீரன்றோ ? அவ்வாறே, வைணவனும் தன்னைப் பிறர் எவ்வளவு துன்புறுத்தினாலும் ("இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண, நன்னயம் செய்துவிடல்—"என்ற குறளுக்கிணங்க) சிறிதளவும் சினமேனும் வருத்தமேனும் கொள்ளாது, பொறுமையோடு சகித்திருந்து, தன்னைத் துன்புறுத்தியவர்களையும் வெட்கச் செய்வான்."

**குறிப்பு:**—இவை, மணிப்ரவாள நடையிலுள்ள 'ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்' என்னும் சிறு நூலிலிருந்து, நண்பர்கட்குப் பயன்படுமாறு பற்பல சீர்திருத்தங்களோடு எளியநடையில் எழுதப்பட்டது.

**ஆ. வ. பதுமநாபபிள்ளை, "திருமகள் நிலையம்" ஆரியூர்.**

உ

சிவமயம்




(547-ம் பக்கத் தொடர்ச்சி.)

## எறிபத்தநாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

### புட்பப்பணிவகை.

"கொண்டு வந்து தனியிடத்தி னிருந்து கோக்குங் கோவைகளு
மிண்டைச் சுருக்குந் தாமமுட னிணைக்கும் வாச மாலைகளுந்
தண்டிற் கட்டுங் கண்ணிகளுந் தாளிற் பிணைக்கும் பிணையல்களு
நுண்டா திறைக்குந் தொங்கல்களுஞ் சமைத்து நுடங்கு நூன்மார்பர்.
(முருகநாயனார் புராணம்-9.)

"ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களினமைத்துத்
தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த வர்ச்சனைகள்
பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார் பரமர் பதிகப் பற்றான
வோங்கிச் சிறந்த வஞ்செழுத்து மோவா நாவி னுணர்வினர்.
(முருகநாயனார் புரா-10.)

"குய்யமோன் றுரைக்கே மாதிநா யகனுக் கொருபலங் குளிர்புன லாட்டி
வைகிர வரையா மத்தொருவில்வந் துளபமா மையினிழைத் தணிந்தோர்
தையலோர் பாகன் பதத்தினைச் சேர்வர் சத்தியஞ் சத்திய மதனுக்
கையுற விலைமுக் காலுமீ துண்மை யருட்குர வனுமரு ளினனால்.
(கருவூர்ப்புரா-67.)

இவ்வாறு ஏற்ற புட்பங்களை ஆராய்ந்தே எடுத்துச் சாத்தவேண்டு மென்பதற்குப் பிரமாணம்:—

"இன்னவாமெனு நாண்மலர்" (பெரியபுராணம் திருமலைச்சிறப்பு-22)
"கொங்குசேர் குழற்காமலர் கொய்திட" (ஷை - 23)
"என்னையாட்கொண்ட வீசனுக்கேய்வன-பன்மலர்" (ஷை - 26)

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.

---

## ஓர் வினா.

### பௌர்ணமி பூசை.

இதனை எதற்காக, எவ்விதம் செய்யவேண்டு மென்பதைப்பற்றியும், இது எந்நூலில் சொல்லப்பட்டிருக்கிறது? இதன் பயன் என்ன? என்பதைப் பற்றியும் தெரிந்த நண்பர் நமது போதினிமூலமாய் வெளியிடக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சந்தா நெ. 9596, M. கந்தசாமிப்பிள்ளை.

# விசூவியஸ் எரிமலையின் சரித்திரம்



(சுமார் 35-வருடங்களுக்கு முன் விசூவியஸ் எரிமலை இருந்த உருவம்.)

இப்பெயர் பெற்ற மலையானது ஐரோப்பா கண்டத்துத் தீபகல்பங்களில் ஒன்றாகிய இத்தாலியாதேசத்தின் ஓர் மாகாணமான காம்பேனியாவில் நேபில்ஸ் குடாவின் கீழ்க்கரையில் ஆகாயத்தை யளாவி நிற்கின்றது. இதைச் சுற்றிலும் உள்ள நாடோ சற்றேறக்குறைய 20 நூற்றாண்டுகளாக நாகரீகம் பெற்றுக் கீர்த்தியடைந்த ஜாதியாரால் குடியேறப்பட்டுள்ளது. இம்மலை, எரிமலைகளென்பவை எவ்விதத்தவை யென்று சாமானியமாய் ஜனங்கள் அறிந்துகொள்ள, ஓர் உதாரணமாக உதவுகின்றது. அதன் கொதிப்புகளைக் குறித்த சரித்திரமோ, பூமியின் உட்புறத்திலுள்ள விசேஷ உஷ்ணத்தைக் குறித்தும், அவ்வுஷ்ணமானது, எரிமலைகளின் வெந்நீர் ஊற்றுக்கள், உஷ்ண ஆவி கக்கும் பிளவுகள் முதலிய இவைகள் மூலமாக வெளியேவரும் விவரத்தைப்பற்றியும், அதனோடு வெளியாகும் வஸ்துக்கள் முதலியவற்றைக் குறித்தும் பூமிலக்ஷணசாஸ்திரங்களின் பிரகாரம் நிரூபிக்க, வேண்டிய சங்கதிகளைக் காட்டி யிருக்கின்றது. இம்மலையின் உயரம் அப்போதைக்கப்போது இதில் உண்டாகும் கொதிப்பின் பிரகாரம் மாறுபாடடைந்து வருகிறது. சிலசமயங்களில் உண்டாகும் வெடிப்பில் மலையின் மேற்புறம் தகர்க்கப்பட்டுச் சின்னபின்னமாக்கப்படுவதால் உயரம் குறைவதுமுண்டு. சிற்சிலசமயங்களில் வெடிப்பின் காரணமாக வெளியே கக்கப்படும் கற்குழம்பு பாறைத்துண்டு முதலியவற்றால் உயரம் அதிகமாவதுமுண்டு. ஆயினும் இம்மலையானது சமுத்திரமட்டத்திற்கு ஏறக்குறைய 4000 அடிக்கு மேல் இருப்பதாகச் சொல்லலாம். வடபக்கத்தில் ஏறக்குறைய 3747 அடி உயரமுள்ளதும் அர்த்தமண்டலமாய் வளைந்ததுமான ஓர் குன்று தற்காலத்தில் கொதிப்பெடுக்கும் பாகமாகிய குவிந்த வடிவுள்ள குன்றை அர்த்தாகாரமாய் வளைத்துக்கொண்டு சரிந்த வண்ணமாய் கீழ்நோக்கிச் செல்கின்றது. மாண்டி சொம்மா என்று சொல்லப்படும் இந்தச் செங்குத்துப்பாகமானது பூர்வீகத்தில் இம்மலையில் இருந்த ஒரு பெரிய உலைவாயின் சுற்றுப்பக்கத்துச் சுவராயிருக்குமென்று தோன்றுகிறது. ஆனால் இப்பழமைவாய்ந்தது தற்

காலத்திய உலைவாயிலிருந்து கக்கப்படும் கற்கள் முதலியவற்றால் தூர்ந்து போய் வருகிறது. முற்காலத்தில் இந்த எரிமலை மிகவும் பெரியதா யிருந் திருக்கலாமெனவும், அப்போது நேர்ந்த ஒரு பெரிய கொதிப்பினால் மேல் பாகம் உடைக்கப்பட்டுச் சின்னாபின்னமாய் உருமாறி இப்போது இருக்கும் சிறிய உருவத்தை அடைந்திருக்கக்கூடுமென்றும் ஊகிக்கவேண்டி யிருக் கிறது. இம்மாதிரி சின்னாபின்னமாயிருந்த இந்த மொட்டை மலையின் சுற் றுப்புறங்களில்தான் பூர்வீக கிரேக்கர்கள் நவீனமாய் வாசஸ்தானங்கள் ஏற் படுத்திக்கொண்டு குடியேறினார்கள். கிறிஸ்து பிறந்த ஆரம்பத்திலும் அதற்குமுன் அநேக நூற்றாண்டுகளிலும் இம்மலையானது வெடித்துக் கொதிப் புக்கொண்டதாகத் தெரியவில்லை. சரித்திரத்தில் ஏற்பட்ட இதன் முதற் கொதிப்பு கிறிஸ்து பிறந்த 79-ம் வருஷத்தில் உண்டாகியது. இக்கொதிப்பு உண்டாகியபின் இந்த மலையிருந்த உருவை இதனடியில் காட்டியிருக்கும் படத்தில் காணலாம். படத்தின் வலதுபுறத்தில் பழையமலையின் சற்றே தாழ்ந்த பாகத்தின்பேரில் குவிந்த வடிவமுள்ளதாய்த் தோற்றுவதே மேற் கண்ட கொதிப்பினால் மலையிலிருந்து வெளியேவீசி எறியப்பட்ட கற்குழம்பு பாறை முதலியவற்றால் உண்டான புதியகுன்று. இச்சிறிய குன்றை ஒழித்து நோக்கில் கிரேக்கர் இந்த மலையைச்சுற்றிலும் குடியேறியகாலத்து அதற்கு இருந்த உருவை ஊகிக்கலாம்.

விசூவியஸ் எரிமலை தற்காலத்தில் காணப்படும் காட்சியை, மேலே இவ் வியாசத் தொடக்கத்தில் காட்டப்பட்டிருக்கும் படத்திற் காணலாம். ஆதி யில் விசேஷ பூசாரமுள்ள இம்மலைச் சரிவுகளில் திராக்ஷைத் தோட்டங்களை ஏராளமாய் விருத்திசெய்தும், மலையின் அடிவாரத்தைச் சுற்றிலும் அநேக கிராமங்களையும் பட்டணங்களையும் ஏற்படுத்தி விருத்தி செய்தும்வந்த கிரேக் கர் இந்த விசூவியஸ் மலையினிடத்து இருந்த எரியுந்தன்மையைச் சற் றேனும் முன்னே அறிந்திலர் போலும். அன்றேல் அவர்கள் அவ்வெரிமலை யின் வாய்க்கு இரையாக, நாடுநகரங்கள் முதலியவற்றை அவ்விடத்தில் ஏற் படுத்தியிருக்கமாட்டார்கள். புற்றில் கொடுநாக மிருக்கிறதென்று அறிந் தும் அதனுட் கைவிடுவாருமுண்டோ? அக்காலத்தில் அதிக புத்தி கூர்மை மையும் அவதானமுமுள்ள பூகோள சாஸ்திரியாகிய டிஸ்டிராபோ என்பவர் இந்த மலையின் குவிந்தவடிவம் எரியுந்தன்மையால் உண்டாயிருக்கக்கூடிய தென்றும், இதன்பாறைகள் அக்கினிசம்பந்தத்தால் மழுங்கியிருக்கக்கூடுமென் றும் சந்தேகித்து எழுதி யிருக்கிறார். இவர் சொல்லியிருப்பதைக்கொண்டும், இன்னும் அக்காலத்திலிருந்த உரோம, கிரேக்க, கிரந்தகர்த்தாக்கள் சொல்லி யிருப்பதைக்கொண்டும் விசூவியஸ்மலைச் சார்பானது கிறிஸ்து பிறப்பதற்கு வெகுகாலத்திற்கு முன்னிருந்து அதிக செழிப்பாய் பயிரேற்றப்பட்ட வள முள்ள பூமியாயிருந்ததென்று தெரியவருகிறது. ஆனால், இம்மலையின்சிகரமோ பயிர்பச்சை யொன்றுமில்லாமல் பாழாய் நாற்புறமும் கரடுமுரடான பாறைச் சுவரால் சூழ்ந்து விடுதியான சாம்பல் நிறைந்துள்ள பள்ள நிலமாயிருந்தது.

## கி. பி. 79-ம் ஸூத்தில் நேரிட்ட பெருங்கொதிப்பு.

இந்த எரிமலையானது வெகுகாலமுதற்கொண்டு கிறிஸ்து பிறந்து 63 வருஷங்கள் வரையில் யாதொரு சேஷ்டையு மில்லாமலிருந்து திடீ ரென்று ஆர்ப்பாட்டஞ்செய்யத் தலைப்பட்டது. 63-ம் வருஷத்திற்கு அப் பால் சற்றேறக்குறைய 16-வருஷங்கள் வரையில் பூகம்பங்கள் விசேஷமாய் உண்டாகிச் சுற்றுப்பக்கத்துக் கிராமங்களுக்கும், பட்டணங்களுக்கும் அதிக கஷ்டத்தையும் கேட்டையும் உண்டாக்கின. இம்மலையிருக்கும் காம்பேனியா மாகாணமுழுமையும் ஜனங்கள் அதிக பீதியடைந்திருந்தார்கள். இவ்வதிர்ச்சி

களால் மலையடிவாரத்திற்கு மேற்புறத்திலிருந்த எர்குலானியம் என்னும் பட்டணமும் தென்கிழக்கிலிருந்த பாம்பியை என்னும் நகரமும் வெகுவாய் நாசமாக்கப்பட்டன. பாம்பியைப் பட்டணத்திலிருந்த ஒரு பெரிய கோவிலானது அஸ்திவாரமுதற்கொண்டு ஒரே குலுக்காய்க் குலுக்கப்பட்டுப்



(கி. பி. 79-ம் ஹூ க்கிற்கு பிற்பாடு விசூவியஸ் எரிமலை இருந்த உருவம்.)

பொடிப் பொடியாய் இடிந்துவிழுந்தது. "மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை" என்னும் வாசகத்தின் உண்மையை நாம் அனுபவசித்தியா யுணர்ந்து அதிக மின்னல் இடிமுழக்கம் இவைகளெல்லாம் உண்டானபிற்பாடு மழை தாரை தாரையாய்ப் பொழியப் பார்த்திருக்கிறோமல்லவா? இதுமாதிரியாகவே எரிமலை கொதிப்பெடுக்கத் தொடங்குமுன் அதன் வரவை மனிதர்க்கு முன்னரே அறிவிப்பதுபோல பூமியின் அதிர்ச்சியும் உட்புறத்தில் இடிமுழக்கம்போன்ற சத்தமும் உண்டாவது வழக்கம். 16-வருஷங்களாய் இவ்விதமாக பூகம்பங்களின் கொடுமையும், கெடுதியும் காலம் செல்லச்செல்ல அதிகரித்துப் பிற்பாடு 79-ம்ஹூ ஆகஸ்டு 24-ம்உ மலைமுடியில் ஓர் பெரிய வெடிப்பெடுத்துக் கொதிப்புண்டாகி அகோரமான தீமைகளை விளைவித்தது. இதனால் நேரிட்ட நஷ்டமோ, உலகசரித்திரத்தில் இதுகாறும் மானிடருக்கு நேர்ந்ததாகக் குறித்திருக்கும் பெருங்கேடுகளில் ஓர் பெரிய அவகேடாய்க் காணப்படுகிறது. இதனால் விளைந்த தீமைகளை இச்சரித்திரத்தை அறிந்தோர்கள் நினைக்க இன்னமும் நடுங்குவார்கள். இக்கேட்டினால் சுற்றுப்பக்கங்களில் குடியேறியிருந்த ஜனங்களுக்கு நேர்ந்த துன்பத்தைக்குறித்தும், இதன்காரண காரியங்களைக் குறித்துப் பரீக்ஷித்து அறிய முயன்ற 'ப்ளினி' என்ற அக்காலத்திய பண்டிதர் ஒருவர் இந்தக் கொதிப்பில் உண்டாகியபுகையால் மூச்சுத்திணறி மாண்டதைப்பற்றியுமுள்ள விவரங்கள், அவர் சகோதரியின் புதல்வராகிய மற்றொரு ப்ளினி என்பவரால் டாஸிடஸ் என்னும் ஓர் சரித்திராசிரியருக்கு எழுதப்பட்டிருந்த இரண்டு கடிதங்களால் நன்கு விளங்குகின்றன. அக்கடிதங்களின்கருத்தை யாவருமறியச் சுருக்கமாகப் பின்னர் எடுத்துரைப்பாம்.

(தொடரும்) A. R. M. உடையப்ப செட்டியார்.




## "மாதரும் ஆடையும்."

செல்வஞ் செழித்ததெனப் பல்வேறு தேசத்தாராலும் புகழப்பட்டு அவர்களுடைய படை எழுச்சிகளுக்கும் காரணமாயிருந்துவந்த பொன்னி நாடாம் நம் தாய்நாடு இதுபோழ்து மிடிமையால் பீடிக்கப்பட்டிருப்பதற்குக் காரணங்கள் எண்ணில. அவற்றில் நவீன நாகரீகத்தால் மயக்குண்ட பெண்டிர் அணியும் ஆடையும் முக்கியமான ஒரு காரணமாம்.

நம்மில் இருபாலரும் உண்டு உடுக்கவேண்டியது மிக்க ஆவசிகமே எனினும், ஆயிரக்கணக்கான ஆடவரும் பெண்டிரும் உண்ண உணவும் உடுக்க உடையும் இன்றி அனுதின உபவாசர்களாய் வெய்யில் மழை பனி முதலியன தங்கள் மெய்யில் தாக்க, சத்திரத்திலோ சாலையின் ஓரத்திலோ மண்ணிலோ மரநிழலிலோ கைகால்களை முடக்கிக்கொண்டு படுத்திருக்க, கடவுளருளால் சிறிது செல்வம் பெற்றவர்கள் மாத்திரம் அளவுக்கு அதிகமாக அனுவசியத்தில் உண்பதும் உடுப்பதுமாயிருந்து தமக்கும் தேசத்திற்கும் வறுமையை உண்டாக்குவது மிக்க கொடிது.

இவ்வாறிருப்பதில் சாதாரணமாய் ஆடவர்களைவிட மாதர்களுக்கே அதிக அளவுள்ள ஆடைகள் வேண்டியிருக்கின்றன வென்பது யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கதே. அப்படியிருப்பதிலும் அவர்கள் விலையேறப்பெற்றனவும் உறுதியற்றனவும் மெல்லியனவுமாகிய ஆடைகளையே வாங்கி அணிய வேண்டும் என்று விரதம் பூண்டிருக்கின்றனர். அத்தகைய மாதரின் செயலே மிகுதியும் கெடுதிக்குக் காரணமா யிருக்கின்றது.

தென் இந்தியாவிலே கல்யாணம் என்ற பேச்சுப் பேசும் முன்னே முகூர்த்தச்சேலை என்னவென்று கேட்பது பழக்கமாய்விட்டது. சொற்ப ஐவேஜி உடையவர்களும், அஃதில்லாது மாதம் பத்து அல்லது பதினைந்து ரூபாய் சம்பளம் பெறும் சிறு உத்தியோகஸ்தர்களும்கூட மணமகள் ஆடைக்குமாத்திரம் குறைந்தது ரூபா 200 - செலவிடவேண்டி யிருக்கிறதெனின் சற்று வலுவானவர்களின் செலவை நாம் சொல்லவும் வேண்டுமோ! இக்குறைந்த தொகையாகிய ரூ. 200 செலவிட மாப்பிள்ளைவீட்டார் மனம் கோணினால் மணமகள் மனமுங் கோணிவிடுகிறது; விவாகம் நின்றுவிடும் போல் தோற்றுகிறது. ஆகவே ஒன்றும் பேசாமல் "கடன்கொண்டும் செய்வன செய்தலைக் காண்டல் இனிது" என்னும் தங்களுக்கானதோர் பழமொழியை அவர்கள் சிரமேற்கொண்டு அதனிமித்தம் கடன்படுகின்றனர். இவ்வாறு கடன்பட்டு வாங்கிய கிளாவர் கொட்டடியோ, இங்கிலீஷ் கொட்டடியோ, மற்றும் விலையுயர்ந்த தெதுவோ அதனை விவாகத்தன்றும் ஒரு வரு

ஷத்தில் வரும் முக்கிய இரண்டொரு விசேஷங்களிலுமட்டுமே அணியச் சமயம் நேரிடுகின்றது. அவைகளை வைப்பதற்காக அவைகள் வாங்கப்படும் போதே முதலுக்கு வட்டி கொடுக்கவேண்டியது அவசியமாதல்போல் இரண்டு அல்லது மூன்று வராகனுக்கு எஃகுப்பெட்டி (Steel trunk) ஒன்றும் சீர் வரிசைகளோடு வாங்கப்படுகிறது. பிறகு அத்தகைய புடவைகள் அவற்றிற்கு வேண்டிய வாசனைத் திரவியங்களோடு பெட்டியை அலங்கரிக்க உதவுகின்றனவே தவிர இவர்களை அலங்கரிப்பதில்லை. ஒரு சிலர் தங்களைப் பிறர் மதிக்கும்படி அப்புடவைகளை யுடுத்து அலங்கரித்துக்கொள்ள விரும்பினாலும் அவர்களின் மாமி நாத்தி முதலியவர்களின் வாய்க்குப்பயந்து அவர்களால் அவை அணியமுடியாமல் போய்விடுகின்றன. இரண்டொரு வருஷம் ஆகிவிட்டாலும் அல்லது அவர்கட்குச் சந்ததி ஏற்பட்டுவிட்டாலும் "கொட்டடி முதலியவைகள் கட்டிக்கொள்ள நாம் இன்னும் சின்னஞ்சிறியவர்களா!" என்று அவர்கட்கு ஒரு வெறுப்பும் ஏற்பட்டுவிடுகிறது. பெண் சந்ததியுள்ள மற்றும் சிலர் குழந்தைக்கு உபயோகப்படட்டும் என்று அவற்றைப் பத்தனம் செய்கிறார்கள். அக்குழந்தை யுவதி யாவதற்குள் நாகரீக உலகத்தில் எவ்வளவோ நவீன சேலைகள் தோன்றிவிடுவதால் நாகரீகநாரிகள் மேலே சொல்லப்பட்ட புடவைகளை அநாகரீகமென்று விலக்க, அம்மாதும் அச்சேலைகளில் அருவருப்புக்கொண்டு அப்போது உலவும் நாகரீகச் சேலையில் நாட்டம் வைக்கிறாள். முடிவாக அப்புடவைகள் பெட்டியில் வைக்கப்பட்டு ஜீர்ணமாகின்றன என்றே செப்பலாம்.

இனி மாமி நாத்தி முதலியவர்கள் இல்லாதவர்களின் அல்லது அவர்கள் ஜம்பம் செல்லாதபடி தம் கணவரை தம்வயப்படுத்தி சுயராஜ்யம் செய்பவர்களின் செய்கைகளைத் தனித்தனி விவரிக்கின் நம்போதினி இடந்தராது. ஆகவே சுருக்கிக் கூறி முடிப்போம்.

அப்படிப்பட்ட பெண் தேவதைகள் முற்கூறிய சேலைகளைத் தினப்படி உபயோகிக்கிறார்கள். ஆயினும் அப்பட்டாடைகள் விலை சரசமுள்ளதும், சுகாதாரத்துக் கேற்பத் துவைத்து உலர்த்தக்கூடியதும், நீடித்தநாள் உழைக்கக்கூடியதுமான பருத்திச்சேலைக் கிடாமோ? ஈசன் நாம் நோயற்றவாழ்வோடும் குறைவற்ற செல்வத்தோடும் இருக்க உன்னி நம் நாட்டைப் பருத்திச் சாகுபடிக் கேற்றவாறு அமைத்தான்.

அங்ஙனமிருப்ப அப்பருத்தி ஆடையைவிட்டு உயர்ந்த ஆடையை அனுதினமும் உடுத்தினால் அதில் அழுக்கேறுகிறது; துவைத்தால் அது கெட்டுவிடுகிறது; துவைக்காவிடினும் அழுக்கேறிக் கெடுகிறது. அந்தோ! என் செய்வது; அதனை அவர்கள் துவைத்தும் துவைக்காமலும் உடுத்தி இரண்டொரு மாதங்களில் கிழித்துவிட்டு "இப்பாழ்மனையில் நாள் என்றும் கிழமையென்றும் பொங்கலென்றும் போகியென்றும் கிடையாது; சதா இந்தப்பழுக்காத்துணிதான் கட்டித் தொலைக்கவேண்டும். பக்கத்து ஆத்து (வீட்டு) பங்கஜத்தின் ஆத்துக்காரர் சம்பளம் பன்னிரண்டுதான்; ஆனாலும் என்ன! அவள் ஒருநாளாவது விலை ரூ. 30, 40 க்குக் குறைந்த சேலைகட்ட நான் பார்த்ததில்லை; அவள்தான் பாக்கியசாலி" என்று குளக்கரைகளில் பல்லவி பாடுகிறார்கள்.

* (தொடரும்) ந. வேங்கடேசன்.




## கப்பல் வியாபாரம்.

மக்களுக்குத் தேவையான உள்நாட்டில் கிடைக்காத பண்டங்களை அவை கிடைக்கக்கூடிய வெளிநாடுகளுக்குச்சென்று பெற்றுவந்துதவவும், பிற தேசத்தினருக்கு அவசியமானவற்றை இங்கிருந்து அனுப்பவும் வாணிபம் அவஸியமாகின்றது. வர்த்தக முகங்களுக் கனுப்பப்படும் விவசாய—கைத் தொழிற் பண்டங்களின் விலையுடன், அவை உற்பத்தியாவதற்கான சம்பளச் செலவு, எடுகூலி, இலாபம் முதலான பலவகைச்செலவு, மூலதனஸ்தருடைய குமாஸ்தா சம்பளம், மஹிமை, வியாபாரச்சாலையின் வாடகை, வரி, சுங்கம் இவைசேர, அவற்றை வாங்கிவிற்கும் வியாபாரிகள் அதற்குமேல் மேற்கூறிய விவரப்படி செலவுகளைத் தாமும் ஒருமுறை சுமத்திப் பின்னர் வழங்குவர். இது வியாபார முறை.

வாணிபம் கடல் வியாபாரம் (கப்பல் வியாபாரம்) தரை வியாபாரம் என இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்படும். பண்டங்களை அந்நியநாடு களுக்கு வியாபாரநிமித்தம் தரைமார்க்கமாகக்கொண்டு செல்ல இயலாவிடில் நதிகளின் வாயிலாகவோ, அல்லது கடல் வழியாகவோ வியாபாரிகள் முறை யே படகுகளிலும் மரக்கலங்களிலும் ஏற்றி அனுப்புவர். நீர் வீழ்ச்சிகளில்லாத நதிகளின்மூலமாகவும்,பாறைகளில்லாத சமுத்திரப்பாதைகளின் வழியாகவும் மரக்கலங்கள்செல்லும். தவிர,உள்நாட்டிலும் வியாபாரிகள் தரைவழி அதிகச் செலவானதாதலின் நதிக்கரையிலுள்ள ஒரு பட்டினத்திலிருந்து மற்றொரு பட்டினத்திற்குப் படகுகளில் சாமான்களைகொண்டு செல்வது முண்டு. சமுத்திரக்கரைகளில் வியாபாரக் கப்பல்கள் தங்கக்கூடிய துறைமுகங்க ளுண்டு. அவற்றைக் கப்பல்களுக்குப் புலப்படுத்த ஆங்காங்கே உயரத்தில் விளக்குகள் அமைக்கப்பெற்றிருக்கும். இத்தீப ஸ்தம்பங்களைக் கலங்கரை விளக்கம் (Light House) என்பர் ஆன்றோர்.

பூர்வகாலத்தில் வாணிபம் பெரிதும் வருஷத்திற் சில மாதங்களிலே தான் நடைபெற்று வந்தது. வியாபாரக்கலங்கள் எத்திசையை நோக்கிச் செல்ல விருக்கின்றனவோ அதற்குச் சாதகமாகக் காற்று வீசும்பொழுதுதான் அவை புறப்படும். பண்டைநாட் கப்பல்கள் பாய்மரத்தை உயர்த்தி, காற்று அப்பாய்மரத்திற் றாக்குதலான் விரைந்து செல்லும் தன்மையுடையன. காற்று சிறிது திசைமாறி வீசும் பக்ஷத்தில் உயர்ந்த பாய்மரங்கள் தாழ்த்தப்பட்டு, கலங்கள் ஆங்காங்கே நின்று, கடல் கொந்தளிப்பெய்துங்கால் ஆங்காங்கே நங்கூரமிட்டுச் செல்லும். இவ்விதமாகவே பண்டைக்காலந்தொட்டு இந்திய நாட்டில் வெளிநாட்டு வியாபாரம் 19-ம் நூற்றாண்டின் ஆரம்பகாலம் வரை யில் நடந்துவந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே உலகமுழுதும் வர்த்தகத்திற்கே ஓர் புதிய சகாப்தம் ஏற்பட்டதென்னலாம். இந்நூற்றாண் டில் மேனாடுகளில் ஒரு புதிய உணர்ச்சிதோன்ற வாரம்பித்தது. அரசாங்க நிர்வாகங்களில் வர்த்தகர்கள் ஆதிக்கம் பெற்றனர்; நவீன ரசாயன இயந்திரங் கள் தோன்றவே, அவற்றின் உதவியால் புதிது புதிதான தொழிற்சாலைகளை

யும் தொழில் முறைகளையும் கண்டுபிடித்தனர். சுரங்கவேலை, ஆலைத்தொழில் முதலான பல தொழில்களை விரைவில் நடத்த இயந்திரங்கள் உதவிபுரிந்தன. பின்பு, இந்தியாவில் மேல்நாட்டார் ஒருவரோடொருவர் போட்டிபோட்டுக் கொண்டு வியாபாரஞ்செய்ய வாரம்பித்தனர். முதல் முதலாக இந்தியாவுக்கு வாணிபஞ்செய்யவந்த வாஸ்கோடிகாமா என்பவர் முதலாக கிழக்கு இந்தியா கம்பெனியாரின் ஆரம்ப (ஸ்தாபன) காலம்வரை மேல்நாட்டிலும் பாய்மரக் கப்பல்களின் சாதகத்தாலேயே வியாபாரம் நடைபெற்று வந்தது. 19-ம் நூற்றுண்டின் ஆரம்பகாலத்திற்றான் காற்றின் விசையையும் அனுகூலத்தையும் எதிர்பாராமல் நீராவியின் சக்தியால் செல்லக்கூடிய கப்பல்கள் கண்டு பிடிக்கப்பட்டன. 1825-ம் ஆண்டில் முதல் முதலாக 'எண்டர்ப்ரைஸ்' என்ற நீராவிக்கப்பல் இந்தியாவிற்கு வந்தது. இந்தக் கலம் மரப்பலகைகளால் செய்யப்படாது எஃகு, இரும்பு, துத்தநாகத்தகடுகளால் செய்யப்பட்டிருந்தது. மேல் கீழாக மூன்று அறைகளும் புதுமாதிரியாக இக்கப்பலில் அமைந்திருந்தன. இவ்விதக்கப்பல்கள் இந்தியாவுக்குக் கீழ்பாகத்திலும் நாளடைவி லோடவாரம்பித்தன. 1842-ல் "பெனின்சுலர் அண்டு ஓரியண்டல் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி" யார் கல்கத்தாவிற்கும் சூயஸ் கால்வாய்க்கும் கடிதப் போக்குவரவை நடத்த ஒப்புக்கொள்ள, பின்பு சென்னை, பம்பாய், கல்கத்தா, கராச்சி முதலான முக்கிய துறைமுகங்களுக்கு நீராவிக்கலங்கள் வந்து போய்க்கொண்டிருந்தன. 1855-ல் பிரிடிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி யொன்று தோன்றி கலம் இந்தியாவின் கடற்கரை யோரமெல்லா மோட வாரம்பித்தது. இக்காலத்திலும், புகைக்கப்பல் தோன்றிய ஆரம்ப காலமாதலாலும், கப்பல்கட்டும் தொழிலாளிகளின் குறைவாலும் பாய்மரக் கப்பல் அதிகம் வாணிபத்தை நடத்திவந்தன. இதுவரையில் மேனாடுகளிலிருந்துவரும் கப்பல்கள் கேப் ஆப் குட் ஹோப் (Cape of Good Hope) வழியாக ஆப்பிரிக்காவைச்சுற்றி இந்தியாவிற்கு வந்துகொண்டிருந்தன. 1869-ம் ஆண்டில் சூயஸ் கால்வாய் வெட்டப்பட, அதனால் சீமையிலிருந்து கப்பல்கள் நேராக வந்துபோக ஏதுவேற்பட நீராவிக் கப்பல்களின் தொகை அதிகமாயிற்று; பிரயாணகாலமும் குறைந்தது.

(தொடரும்) ஸ்ரீ மாருதி தாஸன்.




## டைபாயிட் சுரம்.

"டைபாயிட் என்னும் விஷசுரமும் அதைத் தடுக்கும் முறைகளும்" என்னும் தலைப்பிட்டு ஆனந்தபோதினி, ஆனிமாத சஞ்சிகை, 567-ம் பக்கத்தில் வெளிவந்த வியாசத்தைக் கண்ணுற்றேன். அதில் சொல்லுவது மேல்நாட்டு வைத்தியத்தின் ஓர் பகுதியாயிருப்பினும் அதைக் கண்ணுறுபவர்களுக்குச் சில சந்தேகங்கள் நிகழக்கூடும். அச்சந்தேக நிவர்த்தியாகும்படி சில விஷயங்களை விளக்கிக் காட்டுவோம். கிருமிகளின் பெருக்கே டைபாயிட் சுரம் என்றால், சுரம் வந்த 22 நாளில் சுரம் விட்டுவிடுகின்றதே; கிருமிகள் விருத்தி

யடைவதாயும், தொத்துவதாயும் அதில் சொல்லும் முறைகள் பூராவும் ஒப்புக்கொண்டால் 22 நாட்கள் என்பது பொருத்தமல்லவே; அனுபவத்தில் 22 நாளில் சுரம் நீங்குகின்றது. மேல்நாட்டார் சொல்லுவதுபோல் கிருமிகளால் சுரம் உண்டாகிறது என்றால் மேற்சொல்லிய சுரத்தில் கிருமிகளைக் கொல்ல ஔடதங்கள் உபயோகித்து வியாதியைத் தடுக்கலாமல்லவா? அப்படி மேற்படி கிருமிகளைக் கொல்ல நாளிது வரையில் மருந்துகள் கண்டு பிடித்து அனுபவத்திலில்லாததால் மேற்படி சுரத்திற்கு மேல்நாட்டார் சொல்லும் கிருமிகள் காரணம் என்பது பொருந்தாது. நம் தேகத்தில் எல்லா பாகங்களிலும் எல்லா வியாதிகளிலும் கிருமிகள் எப்பொழுதும் நிறைந்துள்ளன என்பது சகலரும் உணர்ந்த விஷயமே. புதிதாய் இப்பொழுது மேல்நாட்டார் எல்லா வியாதிகளுக்கும் கிருமி பரிசோதனைசெய்து, இரத்தத்திலும் கோழையிலும் மலத்திலும் விருத்தியடைந்திருக்கும் கிருமிகள்பால் என்ன விஷம் அதிகரித்திருக்கின்றதோ அதற்குத் தக்கபடி வியாதியைக் கணிக்கின்றார்கள். இக்கணிதமானது நோய் வந்த பிறகு கணிக்கக்கூடியது. இக்காரியத்தைக் கொண்டு நோயின் காரணத்தைச் சொல்வது பொருந்தாது. நோயின் ஆரம்பத்தில் கிருமிகள் கிடைக்கமாட்டா; முதிர்ச்சியில் கிருமிகள் மலிந்து கிடக்கும். இத்தகைய சோதனையைக்கொண்டு நோயின் காரணங்களைச் சொல்பவர்களின் அபிப்பிராயம் முற்றும் பொருத்த மற்றதெனத் தெளிவுபடச் சொல்ல முடியுமானாலும் வளருமென அஞ்சி இத்துடன் நிறுத்திக் கீழ்நாட்டின் அந்நோயின் காரணங்களையும் அதைத் தடுக்கும் முறைகளையும் சிறிது கூறுவோம்:—

"டைபாயிட்" என்பதை மேல்நாட்டார்கள் இரண்டு விதமாகக் கூறுவார்கள். அவை "டைபாயிட்" 1, "டைபஸ்" 2, என்பவையாம். இதையே நம்மவர் சன்னிபாதசுரம், அதிசார சன்னிபாதசுரம் எனச்சொல்லி, அவற்றையும் சூட்சுமமாகப் பிரித்து வாத சன்னிபாதம், பித்த சன்னி பாதம், சிலேத்ம சன்னிபாதம் எனவும், இவையன்றி வாத பித்த சிலேத்ம தொந்த சன்னிபாதமெனவும், மகா சன்னிபாதமெனவும் கூறியுள்ளார்கள். அவற்றிற்குக்காரணங்களையும், அவற்றின் கால அளவுகளையும், சிகிச்சைகளையும் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கின்றார்கள். வாத சன்னிபாதம் முதல் மகா சன்னிபாதம் வரையில் சொல்லியமுறைக் கால அளவுகளால் 7 நாள் சன்னிபாதம், 9-நாள் சன்னிபாதம் 13 நாள் சன்னிபாதம், 22 நாள் சன்னிபாதம், 40 நாள் சன்னிபாதம் எனப் பிரித்தார்கள். அவற்றில் மேல் நாட்டார்கள் 13 நாள் சன்னிபாதமும், 22 நாள் சன்னிபாதமும், 40 நாள் சன்னிபாதமும் கண்டு பிடித்து எழுதியுள்ளார்கள். 7 நாள், 9 நாள் சன்னிபாதங்களைக்கண்டு பிடிக்காததற்குக் காரணம் என்னவெனில் சன்னிபாதசுரத்தில் 10 நாள்களுக்குமேல் தான் கிருமிகளின் பரீட்சை ஏற்படுவதால், அதற்குள் குணமாய்விடும் ஷை சுரங்களைக் கணிக்க முடியாமல் விட்டுவிடுகின்றார்கள். இன்றளவும் மேல்நாட்டின் முறைப்படி 10 நாட்கள் சுரம் அடித்துக் கிருமிகள் மலிந்த பிறகுதான் அதைச் சன்னிபாதம் என்று அவர்கள் கண்டு பிடித்துச் சிகிச்சை செய்து வருகின்றார்கள். நம்மவர்களின் விதியோ நோய் கண்ட 3 நாளில் கண்டு பிடிக்க ஏதுவாயிருக்கின்றது. அதைப்பற்றிய விஷயங்கள் பூராவும் இங்கு எழுதவேண்டுமானால் ஒரு புஸ்தகமாய் விடக்கூடும். ஆதலால் இத்துடன் நிறுத்திக்கொண்டு அவ்வியாதியைப்பற்றிய அவசியமான சில விஷயங்களை மட்டும் எழுதி இவ்வியாசத்தை முடிப்பாம்.

அதிசார சன்னிபாதமானது மலப்பையில் உண்டாகும் ஓர்வித இரணமாகும்; இச்சுரத்திற்கு வயிற்றுப்போக்கும் இருக்கும். சன்னிபாதமானது

அடிவயிற்றில் உண்டாகும் இரணம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். இது, உட்பிரிவுகளால் 7, 9, 13, 22, 40 நாள் சுரங்கள் எனப் பிரிக்கப்படுகின்றது. மேற்படி சுரம் வருவதற்குக் காரணங்கள் பலவுண்டு. உஷ்ணம் அதிகரித்து, உஷ்ணபேதிகண்டு, அவற்றிற்குச் சரியர்னபடி சிகிச்சை செய்யாமல் விடுவதாலும், உஷ்ண ஆகாரங்களை உட்கொண்டு வருவதாலும், அதி போகத்தாலும், வெட்டை வியாதியின் அதிகரிப்பாலும், மற்றும் அநேக காரணங்களாலும் மேற்சொல்லிய பாகத்தில் இரணம் உண்டாகின்றது ; அவ்விரணம் உண்டான நாளிலிருந்து ஆறுவதற்கு மேற்சொன்னபடி பலநாட்கள் செல்லுகின்றன. இந்நோயின் ஆரம்பத்திலும் முடிவிலும் காணப்படாத டைபாயிட் கிருமிகள் மத்திய காலங்களில் காணப்படும். அக்கிருமிகளே இதற்குக் காரணம் என்று சொல்லுவது பொருத்தமாகாது. ஆனல் பெரிய மேதாவிகளான மேல்நாட்டு வைத்திய நிபுணாகளால் கணடு பிடிக்கப்பட்ட முறைப்படி கிருமிகளின் விஷயத்தால், நோயை இன்னதென்றுகண்டு சொல்லக்கூடுமென்பது வாஸ்தவமேயானலும் இதற்கு அதே காரணம் என்று சொல்லுவது பொருந்தாது. ஆனல் சன்னிபாத சுரமுள்ளவரின் சம்பந்தத்தால் அது தொத்தக்கூடும் என்பது ஒருவகையில் பொருந்தும் எனினும், அதுவும் நம் ஆசாரத்தால் இந்தியருககுப் பொருந்தாதெனவே உறுதியாய்ச் சொல்லலாம். அதன் விஸ்தாரத்தை நோயணுகாவிதியில் கூறப்போவதலால் இம்மட்டோடு நிறுத்திக்கொள்வோம்.

(தொடரும்.) டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.

## தேச நன்மையைப் பற்றிய ஓர் விண்ணப்பம்.

ஸகோதர, ஸகோதரிகளே! இப்பொழுது நமது இந்திய தேசத்தின் கண் எங்கு பார்த்தாலும், "சுதேச முன்னேற்றம், தேசமுன்னேற்றம்," என்னும் பேரொலி பரவி நிற்கிறது. இங்ஙனம் உலகில் பலர் "சுதேச முன்னேற்றம்" என்று சொல்லி வந்தாலும், அதற்குரிய வழிகளில் நடக்கிறவர்கள் நூற்றில் ஒருவராக இருக்கின்றனர். எதிலும் ஒத்துழைத்தால் தான் சகல காரியமும் சித்திக்கும். தற்பொழுது மகாத்மா காந்தியின் வழிகளை அனுசரிப்பவர்கள் வெகு சிலரே. இவ்விதம் இருந்தால் நம்முடைய நாடு முன்னேறுவதெப்படி ? தற்கால நாகரீக வாலிபர்கள் பாம்பீச் ஸூட்டும், பாப்லின் ஷர்ட்டும் அணிகிறார்களே தவிர கதராடையைக் கண்கொண்டு பார்ப்பதுகூட இல்லை. பெண்மணிகளோ "மஸ்லின் புடவை வாங்குவோமா ? பவுடர்கள் வாங்குவோமா ? இன்னும் என்ன புதுமாதிரி ஸோப் வந்திருக்கிறது ?" என்று எண்ணமிடுகிறார்களே தவிர கதர் என்னும் பேச்சை எடுப்பது அரிதாக இருக்கின்றது. இவ்விதம் இருப்பவர்களால் நம்தேசம் செழித்து, நாம், நம்முடைய சுதந்தரங்களைப் பெறுவதெப்படி ? இது நாம் வானத்து அம்புலியைப்பிடிக்கப் பிரயத்தினம் செய்வதுபோலிருக்கிறது. ஆகையால் பாரத செல்வர் செல்விகளே ! இனியாவது மகாத்மா காந்தியின் வழிகளை அனுசரித்து நடவுங்கள். பாரதமாதாவின் வறுமையை அகற்றுங்கள். தாயைக் காப்பாற்ற வேண்டியது தனயர்களின் கடமை அல்லவா ? ஆகையால் இவ்விஷயத்தில் தாமதம் செய்யாதீர்கள்.

மைதலிபாய்.

# உரை மணி மாலை.

**மி**கவும் ருசியுடன் கூடிய உணவை ஒருவனாக உண்ணுதல் ஆகாது. முக்கியமான விஷயங்களில் தனது யோசனையையும் தீர்மானத்தையும் மட்டும் நம்பி எவனும் நடத்தலும் கூடாது. தூரதேசம் போவோன் துணையின்றிச் செல்லுதல் ஒருபோதும் தகாது.

*  *  *

ஒருவனை நாசம் பண்ணக்கூடிய வஸ்துக்கள் பல இம்மண்ணுலகினில் இருந்தபோதிலும் அவற்றில் முக்கியமாகக் கருதப்படுபவை 'பரஸ்திரீகமனம், களவு, நண்பர்களைத் தள்ளுதல்' என்ற மூன்றேயாகும்.

*  *  *

பிறரை நம்பு; அவர்களும் உன்னை நம்புவார்கள். அவர்களைக் கௌரவமாக நடத்து; நீயும் மரியாதையாக நடத்தப்படுவாய்.

*  *  *

தனது நிலைமைக்குத் தக்கவாறு தன்னால் கூடியவரையில் எவனொருவன் ஒரு காரியத்தைச் செய்கிறானோ அவனே அக்காரியத்தை அதிக சிலாக்கியமாகச் செய்தவனாகிறான். ஆனால் அதேகாரியத்தை, அதிக தனம் படைத்திருந்தும் அதற்குத் தக்கபடி ஒரு தனவந்தன் செய்யாமற்போவனேல் அதைவிட இழிவு வேறொன்றுமில்லை.

*  *  *

கடவுள் எல்லா வஸ்துக்களிலும் இருக்கிறார்; அதி அற்புதமான சிருஷ்டிகளுக்குக் காரணபூதரும் அவரே. ஆனால் அவர் இவ்வித ஆச்சரியகரமான வஸ்துக்களெவற்றிலும் பிரஸன்னமாக இருப்பதில்லை. காருண்யமும், தயையும் தர்மசிந்தனையும் குடிகொண்ட கபடமற்ற ஹிருதயங்களிலேயே அவர் எப்பொழுதும் பிரஸன்னமாய் விளங்குகிறார்.

*  *  *

பிறரது சந்தோஷத்தைக்கண்டு நாமும் களிப்புறுதல் வேண்டும். பிறர் சங்கடப்படும்போது நாம சிரிப்பது மகத்தான பாபத்தை யுண்டுபண்ணும்; அது மகா பாபகரமான செய்கைகளில் ஒன்றாகும்.

*  *  *

ஒரு வஸ்துவின் உண்மையான தன்மைகளை அறியவேண்டுமானால் அது அதன் இடத்திலிருந்தால்தான் முடியும். இருக்கவேண்டிய இடத்தில்தான் ஒன்றின் உண்மையை உள்ளபடி உணருவது சுலபமாகும்.

*  *  *

ஆயுளின் அருமையைத்தெரிந்த எவனும் பயன்தரத்தக்க நேரத்தை வீணாகக் கழிக்கமாட்டான்.

*  *  *

நமது தேகங்களே தோட்டங்கள். நமது இஷ்டங்களே தோட்டக்காரர்கள்.

*  *  *

தனக்குக் கெடுதி நேரிடாவண்ணம் அதைத் தடுத்துக்கொள்பவனே புத்திமானாவான். தன்னையும் மீறிவரும் கஷ்டங்களைப் பொறுமையுடன் தாங்கி, அவற்றினின்றும் பெருமையுடன் நீங்குவோனே ஸாமர்த்தியவானாவான்.

**வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா.**

கழிக்க வேண்டியதாயிற்றே' என்று பிரலாபிக்கலானார். அப்போது ஆர்தர் படகிலிருந்தபடியே, மேற்காட்டிய ஆங்கில கவியில் உள்ள வார்த்தைகளைக் கூறினார். அவற்றின் கருத்தாவது:—

"'பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே'
என்ப துலகத் தியற்கையா மதனால்
பழமை யானவோர் பழக்கநன் றாயினும்
பின்வருங் கால பேதத் தாலது
மாறியே தீதாய் வருதலுங் கூடும்
அவ்வகை மாற்றத் தாலிவ் வுலகம்
கலங்கி டா திருக்கக் கடவுளே அனேக
காரியங் களைமனக் களிப்புடன் மாற்றிப்
புதுமையா வமைத்துப் பூதலம் போற்றுவர்.
ஆதலால் இதனைநீ அறிந்தே தெளிவாய்.
நானுனக் காறுதல் நவிலுவதென்னே!
முடியுமென் வாழ்க்கையோ முடிந்ததிவ் வுலகில்
நான்புரிந் தவையெலாம் நல்லன வாகக்
கடவுள் தாமே கருணைசெய் திடுவார்.
இனியெனைக் காணுதல் இயலா துனக்கே
ஆதலால் என்றன் ஆன்மா நற்கதி
அடையப் பிரார்த்தனை அன்பாய்ப் புரிவாய்.
இவ்வுல கதனில் இனிதுசித் திக்கும்
இரவும் பகலும் என்றனக் காகச்
செய்துகொண் டிருஅத் திருப்பிரார்த் தனையை.
பின்னும்நீ செய்யுமப் பிரார்த்தனை ஊற்றென
வற்றா தென்றும் வளர்வ தாகுக.
மனிதா தமக்கும் மற்றநண் பர்க்கும்
வேண்டு நலம்பெற மெய்ப்பிரார்த் தனையைப்
பண்ணு விடிலோ பகுத்தறி வுடனே
கூடும்அன் னவர்க்கும் கூறுமவ் வறிவிலா
ஆடுமா டெட்கும் ஆம்விததி யாசம்
யாதுகொல் எல்லா விதத்திலும் இப்பெரும்
பூமி பிரார்த்தனைப் பொற்சங் கிலிகளால்
கடவுளின் கழலுடன் கட்டப் பட்டு
விளங்குகின் றதுநீ மீண்டுபோ யுனது
கடமையைச் செய்து களிப்புறு வாயே."

என்பதாம்.

இதனால், உலகத்தில் எப்பேர்ப்பட்டவர்களும், எத்தகைய செயல்களும் மறைந்து காலந்தோறும் புதிய மனிதர்களும், நவீனச் செயல்களும் தோன்றுதல் உலக இயற்கையென்பதும், இவற்றைக் கடவுளே உண்டாக்குகிறாரென்பதும், ஆதலின், பழைய மனிதரும் செயல்களும் மறையும்போது அவரைச் சார்ந்துள்ளார் வருந்தலாகாதென்பதும், அவர், மறைந்தவர்க்கும் தமக்கும் நன்மை தரும்படி கடவுளைப் பிரார்த்திக்கவேண்டுமென்பதும், அப் பிரார்த்தனையால் எல்லா நலங்களும் உண்டாகுமென்பதும், தெய்வ பிரார்த்தனையில்லாதவர் மிருகங்களுக்கு நிகராவாரென்பதும் விளங்கும்.

ம. இராஜகோபாலபிள்ளை.



## வினோதக் கூற்று.

**சா**கப்போகின்ற நிலையிலுள்ள ஒருகிழவி தன் மருமகளைக் கூப்பிட்டு "அடியே! ஒருபொட்டு நெய் ஊற்றடி! எல்லா வெண்ணெய்களையும் உருக்கி, உருக்கி உறிக்கலையத்தில் வைக்கிறாயே; சிறிது ஊற்றக்கூடாதா? என் மகன் வரட்டும் சொல்லுகிறேன்" எனக்கூறினாள். அதற்கு அவள் "சொல்லிக்கொள் பயமில்லை" யென்றாள். மகன் வந்தவுடன் தாய் நடந்தவற்றைக் கூறினாள். அதற்கு மகன் "நான்தான் நெய்யைச்சேர்த்து வைக்கச்சொன்னேன். உனக்குக் கருமாதிசெய்யும்பொழுது பார்ப்பான் எக்கியத்தில் ஊற்ற ஒருபடி நெய் கேட்பானே, நான் என்ன செய்வேன்" என்று கூறினானாம்.

*** *** ***

ஒருவன் திடீரென்று தன்பக்கத்தில் நின்றவனை ஓங்கி அறைந்து "தடிப்பயலே! ஒரே ஒருபெண், ருதுவாகி 6-மாதமேயாயிற்று; உன் ஜாதி என்ன? குலமென்ன? நீ யார்? என்னை நடுரோட்டில் நிறுத்தி "பெண்கொடுக்க முடியுமா?" என்று என்னை எப்படிக்கேட்கலாம்?" என்று மிக்க கோபாவேசத்துடன் கூறினானாம். அடிபட்டவன்—"அடபாவமே! உன்னுடைய பாக்கிட்டில் பவுண்டன் பென் (Fountain Pen) இருந்ததைக்கண்டு சிறிது எழுதிவிட்டுக் கொடுப்பதற்காக 'பென் கொடுக்கமுடியுமா' என்று கேட்டதற்கு நல்ல புத்தி கொடுத்துவிட்டாய்" எனக்கூறி ஆங்கிலமொழியின் அருமையை நினைத்துச் சென்றானாம்.

*** *** ***

ஒருவன் தன்னுடைய தாய்க்குத் தலைத்திதி கொடுப்பதற்காக ஒரு புரோகிதரைக் கூப்பிட்டிருந்தான். திதி கொடுத்துக்கொண்டிருக்கும்பொழுது புரோகிதர் "அரிசி 5-படி கொண்டுவா" என்றார். பையன் "எதற்காக அரிசி?" என்றான். புரோகிதர் "இறந்துபோன உன் தாய்க்கு ஒரு வருடத்திற்குப் போதுமான சாப்பாடு அனுப்பவேண்டாமா?" என்றார். பையன் உடனே 5-படி அரிசியும் கொண்டுவந்து வைத்தான். புரோகிதர் அரிசியைப் பார்த்துவிட்டு "இதென்ன புழுங்கலரிசி! பச்சரிசி கொண்டுவா!" என்றார். அதற்குப் பையன் "என் தாய எப்பொழுதும் புழுங்கலரிசியே சாப்பிடுவது வழக்கம்; ஒருநாள் பச்சரிசிச் சாதத்தைத் தெரியாமல் சாப்பிட்டுவிட்டு வயிற்றுப் போககால் 10-நாள கஷ்டப்பட்டாள். புழுங்கலரிசியைத்தான் தாங்கள் அனுப்பவேண்டும்" என்றான். புரோகிதர் "எனக்குத்தான் அரிசி, உன் தாய்க்கு அல்ல" என்று சொல்லியிருந்தாலாவது பச்சரிசி கிடைத்திருக்குமே என்று வருந்தி, புழுங்கலரிசியையும் விட்டுவிடாமல் எடுத்துப் போய்விட்டார்.

**கி. ஆ. பெ. விசுவநாத பிள்ளை**, திருச்சிராப்பள்ளி.

---






## கிருஷ்ணாவின் அல்லது துப்பறியும் சீடன்

(12-ம் தொகுதி 578-ம் பக்கத் தொடர்ச்சி)

அச்சமயம் உலகநாதர் திடீலென்று திடுக்கிட்டதை இன்ஸ்பெக்டர் கவனிக்காமலே "ஏதேனும் கெடுதியாவது ஆபத்தாவது நேர்ந்திருக்கலாமென்று கருதுகிறீரா?" என்றார்.

உலகநாதர்:—கெடுதியா? ஆபத்தா? நீர் கூறுவது எனக்கு விளங்கவில்லை.

இன்ஸ்பெக்டர்:—நான் கேட்டபதாவது, "யாராவது அவளைப் பலாத்காரமாய்க் களவாடிக்கொண்டு போயிருப்பார்களா? யாருக்காவது அப்படிச் செய்ய ஏதேனும் காரண மிருக்குமா?" என்று கேட்கிறேன்.

உலக:—எனக்குப் புலப்படவில்லை, புலப்படவில்லை. யாருக்குத்தான் அப்படிச்செய்ய என்னகாரணமிருக்கும்? என்னத்திற்காக அப்படிச்செய்ய வேண்டும்?

இன்ஸ்:—உமக்கு யாரேனும் விரோதிகளுளரோ?

உலக:—நானறிந்தமட்டில் ஒருவருமில்லை.

இன்ஸ்:—தங்கள் புத்திரிக்கும் யாரும் விரோதியில்லையே? அதாவது யாராவது தன்னை மணம்புரியும்படிகேட்டு அவள் மறுத்துவிட்டது உண்டோ?

உலக:—இல்லவேயில்லையென்று நான் உண்மையாய்க் கூறுவேன்.

இன்:—அவளுக்குச் சொந்தமாய்ப் பிரத்தியேக ஆஸ்தி யேதேனுமுண்டோ? யாராவது பந்துவால் அவள் பேருக்கென்று எழுதிவைக்கப்பட்டது?

இதைக்கேட்டதே உலகநாதர் மறுபடி திடுக்கிட்டார். அவர் முகம் வெளுத்துவிட்டது. "இல்லை. அவளுக்குச் சொந்தத்தில் ஒரு ஆஸ்தியுமில்லை. ஆனால் அவள் என் ஏகபுத்திரியாதலால் என் ஆஸ்திமுழுமையும் எனக்குப் பின் அவளுக்கே சொந்தமாகும். ஆயினும் அவள் இல்லாவிட்டால் அந்த ஆஸ்தி யெனக்கென்ன பிரயோசனம். ஓ! மனோன்மணி! ஓ மனோன்மணி! நீ யெப்படித்தான் மனம் துணிந்து இவ்வாறு செய்தாயோ!" என்று மிக்க துயரத்தோடு கூறினார்.

இன்ஸ்பெக்டருக்கு இன்னது கூறுவதென்று புலப்படவில்லை. அவள் சிறுபிள்ளை விளையாட்டுத்தனமாய் இப்படிச் செய்திருப்பாள் என்றே அவர் மனதிற்பட்டது. அதை வாய்விட்டே கூறிவிட்டார்.

உலக:—இல்லை யில்லை. அவள் அப்படிப்பட்டவளல்ல. நீர் அவளை யறிந்திருந்தால் ஒருபோதும் இப்படிக் கூறியேயிருக்கமாட்டீர். அப்படியில்லை. இதில் ஏதோ மிகவும் ஆழ்ந்த மர்மம் இருக்கிறது. அவள் அப்படிப்பட்ட முட்டாளல்ல. அவள் நல்ல அறிவுள்ளவள். ஆயினும் நீர் அவளைக் கண்டுபிடித்துத் தருவீரல்லவா?

இன்ஸ்பெக்டர் சற்றுநேரம் சிந்தித்து "நீர் வெகுமதி யளிப்பீரல்லவா? ஒரு ஆயிரம் டாலர் (சுமார் மூவாயிரம் ரூபாய்) கொடுப்பீரல்லவா?" என்றார்.

உலக:—ஒரு ஆயிரமா, ஐயாயிரம் பத்தாயிரம் வேண்டுமாயினும் சரி; என் புத்திரிமட்டும் மறுபடி வீட்டிற்குள்வந்து சேரவேண்டும்.

இன்ஸ்:—அவளுடைய புகைப்படம் இருக்கிறதா?

உலக:—இதோ அதைக் கேட்பீரென்று கருதிக் கையில் கொண்டுவந்தே யிருக்கிறேன்.

இன்ஸ்:—சரி; மிக்க நலம்; இதிலிருந்து அனேகம் பிரதிகளை யெடுத்து இப் பெண்ணைக் கண்டுபிடித்துக் கொடுப்போர்க்கு இவ்வளவு பரிசளிப்பே னென்று நாடெங்கும் பிரசுரம் செய்யவேண்டும்.

இம்மொழிகளைக்கேட்டதே உலகநாதர் பீதியடைந்தவர்போல், "வேண் டாம் வேண்டாம். அப்படிச்செய்தால் பத்திரிகைகளிலெல்லாம் அவள் பெயரே யிருக்கும். அவளைப்பற்றியே யாவரும் பேசுவார்கள். ஆகையால் அவள் பெயர் வெளிவராமல் இவ்விஷயம் இரகசியமாகவே நடத்தப்பட வேண்டும்" என்றார்.

இன்ஸ்:—தாங்கள் கூறுவது நல்லதே. ஆனல் நான் என்ன செய்யக்கூடும்? தங்கள் கன்னிகையை இரகசியமாய் என் ஆட்கள் தேடவேண்டுமென் பது தங்கள் கருத்து. நானே அப்படிச்செய்ய முடியாது. சட்டம் எப்படி வழிகாட்டுகிறதோ அப்படியே நான் நடக்கவேண்டும்.

உலகநாதர் துயரத்தோடு "அந்தோ! அப்படியானல் நீர் எனக்கு உதவி செய்யமாட்டீரோ?" என்றார்.

இன்ஸ்பெக்டர் திடீலென்று என்னமோ நினைத்துக்கொண்டு "அடடா! இது முன்னமே என் நினைப்பிற்கு வரவில்லை; இதினல் உதவிசெய்ய என் ஞல் முடியாது. ஆனல் உமக்கு உதவிசெய்யத்தக்க ஆளிடம் உம்மை யனுப்புகிறேன். உம்முடைய புத்திரியைக் கண்டுபிடிக்கவேண்டுமானல் துப்பறியும் கிருஷ்ணுவிங் ஒருவரே இதற்குத் தகுதியானவர்" என்றார்.

உலக:—அவர் யார்?

இன்ஸ்:—அதைக் கூறுவது கஷ்டம். ஒன்று கூறுகிறேன். என்னல் முடி யாது, எப்படியும் நான் தோல்வியடைவேன் என்று எனக்கு நிச்சய மாய்ப் புலப்பட்டால் அத்தகைய விவகாரத்தில் அவரின் உதவியை நான் கோருவதுண்டு. அப்போது நான் ஜெயமடைவது நிச்சயம்.

உலக:—அப்படியானல், அவரை வரவழைக்கிறீரா?

இன்ஸ்:—அவரை வரவழைப்பதா? என் அதைவிட நமது அரசரை யிங்கு வரவழைக்கலாம். நீர் அவரிடம் செல்லவேண்டும். ஒருசமயம் அவர் இதைக் கண்டுபிடிக்க ஒப்புக்கொள்ளாமல் விட்டுவிட்டாலும் விட்டு விடுவார். ஆனல் ஒப்புக்கொண்டாலோ கட்டாயம் உமது புத்திரியைக் கண்டுபிடித்து விடுவார் என்பது நிச்சயம். இன்னென்று: நீர் அவரைப் பூரணமாய் நம்பவேண்டும்; அவர் மரணத்தறுவாயில் இருப்பதுபோல் தோன்றினலும், அவர்மட்டும் ஒப்புக்கொண்டால் எப்படியாயினும் உமது புத்திரியைக் கண்டுபிடித்துவிடுவார். நீர் அவரிடம் இதை யொப்பித்துவிட்டால் உமக்கு இதைப்பற்றிச் சற்றும் கவலையே வேண்டியதேயில்லை.

(தொடரும்.) ஆரணி-குப்புசாமி முதலியார்.

# ஆனந்த போதினியின் பயன்.

வெண்பா.

ஆனந்த போதினியின் ஆன அரும்பயனை
நானன் புடனே நவிலவே—ஆனந்தி
சத்திபெறு முக்தமசு புத்திரனை யத்திமுக
வத்தனைமி கப்பணிவே னால். (1)

ஆனந்த போதினியன் பாயிவ் வுலகமெலாம்
ஞானந் தனையெய்தி நண்ணுமுயர்—மோன
வரம்பதனைக் காண வழிகாட்டிக் கல்வி
நிரம்ப வளித்திடுங்கா ணேர்ந்து. (2)

ஆனந்த போதினியொன் றங்கை தனிலிருப்பின்
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—மானங்
குலைய விடாது குவலயத்தி லோங்கத்
தலையாய் விளக்கிடுமே தான். (3)

மாதர் தமக்குநன் மாணவர்க்கும் மாநிலத்தில்
ஏதமிலா யாவர்க்கும் இன்புறவே—நீதிமொழி
அன்பாய்ப் புகன்றுநமை ஆதரிக்கு மேன்மையதாம்
நன்பார்ந்த போதினி நயந்து. (4)

ஆனந்த போதினிதான் ஆர்கலிசூ ழும்புவிக்கே
ஆனந்தம் நல்கும்பே ராரார்நி தியாம்—தானன்பாய்
எல்லோர் மனைதனிலு மெய்தியிருந் தாற்பலரும்
வல்லோர்க ளாவர்மதி வாய்ந்து. (5)

பாலர் யவனப் பருவத்தி னோர்விருத்தர்
சாலப் பிணிதீர்க்கும் சஞ்சீவி—ஞாலத்திற்
கண்டிதமா யாவர்க்கும் காணமருந் தேபுகலும்
பண்டிதையாம் போதினிபண் பால். (6)

பொதுசமா சாரம் புதுமையுடன் காட்டி
மதியே விளக்கி மனதிற்—கதிசயங்கள்
மேதினியி லேயுரைக்கும் மேன்மைமிக ழானந்த
போதினியா வர்க்குமுயர் பூண். (7)

என்றுங் குறைவின்றி ஈச னருள்மிகுத்தே
என்றென்றும் வாழி யினிதாக—நன்றிபெறும்
ஆனந்த போதினியு மன்னதன்பத் ராதிபரும்
வானம் புவிபுகழ வாய்ந்து. (8)

V V S S பாலகவி, G T. அரங்கசாமிதாஸ்.

## அறிவிப்பு.

தற்சமயம், நமது ஆனந்தபோதினிக்கு பர்மா, சிலோன், பினங், சிங்கப்பூர், இந்தியா முதலிய இடங்களில் எங்களுடைய ஏஜண்டுகள் யாருமில்லை. ஆதலின், சந்தா செலுத்தியோ, வி. பி. யில் பணம் கட்டியோ சந்தாதாரராகச் சேர்வோரும் புத்தகங்களுக்கு ஆர்டர் செய்வோரும் நமக்கு நேரில் எழுதிக் கொள்ளவேண்டும். பின்னர் ஏஜண்டுகள் நியமிக்கப்படும் சமயங்களில் அவ்வப்போது அவ்விவரம் பத்திரிகையில் தெரிவிக்கப்படும்.

பத்திராதிபர்.

## வர்த்தமானப் பகுதி.

ஓர் ஆச்சரியம்:—பிரான்சு தேசத்திலுள்ள லில்ஹி எனுமிடத்தைச் சேர்ந்த வினிபிரட்டையர்னி என்னும் இரண்டாண்டுக் குழந்தை நாலு பாஷைகளைப் பேசுகிறது என்று சொல்லப்படுகிறது. பிரெஞ்சு, இங்கிலீஷ், ஜெர்மன், தற்கால கிரீக் ஆகிய இப்பாஷைகளில் கேள்விகள் கேட்கப்பட்டால் அக்குழந்தை அக்கேள்விகளுக்கு அந்தந்தப் பாஷையிலேயே தக்க விதமான பதில்களை அளிக்கிறதாம்.

* * * * * *

103-வயது வரை உழைத்தவர்:—நாட்ஸ் பிரதேசத்தைச் சேர்ந்த பார்ச்ஸ்டோன்-லி. வேல் எனுமிடத்திலுள்ள ஸ்ரீமான் ஜார்ஜ் கான்ட் என்பவருக்கு இப்போது 103 வயதாகிறது. இவர், தொண்ணூற்றூறு ஆண்டுகளுக்கு முன் வேலை செய்ய முதல் முதலாக ஆரம்பித்தார். அப்போது இவருக்குத் தினமொன்றுக்கு ஒரு பென்னி வீதம் கூலி கொடுக்கப்பட்டது. இவர் இந்தத் தொண்ணூற்றூறு வருடகாலத்தைச் சுமைகள் சுமப்பதிலும் விவசாயத்தொழிலிலும் குடிசையிலுமாகக் கழித்தார். சென்ற வருடத்தில் தான் இவர் விவசாயத்தொழில் தம்முடைய வயதுக்குத் தக்கதாயில்லை யென்று விட்டுவிட்டுத் தோட்டத்தொழிலில் இறங்கினார். இவர் நீண்டகாலம் இருப்பதற்குரிய காரணங்கள் வேலையும், மனக்கவலையின்மையும், இவராலேயே உண்டாக்கப்பட்ட சாராயமுமேயாம். இவருடன் பள்ளிக்கூடத்தில் படித்தவரும், நாடிங்ஹாமைச் சேர்ந்தவருமாகிய ஸ்ரீ வில்லியம் வாகர் என்பாருக்கு 105 வயதாகிறது. இவர் மேற்கூறியவரைத் தம் பிள்ளையாக மதித்து நடக்கிறார்.

* * * *

மின்சார இருதயம்:—(Electric Heart) இருதய துடிப்பு நின்றவுடன் உயிர் போய்விடுகிறது என்ற கொள்கை ஜனங்களிடை பரவியிருக்கிறது. அது அநுபவத்திற்கு ஒத்ததாகவும் இருக்கிறது. இப்போது ருஷ்யாவில் ஒரு மேதாவி கண்டுபிடித்திருக்கும் இயந்திரத்தின்படி மேற்கூறிய கூற்றும் பொய்யாகிவிடுகிறது. அவரால் கண்டு பிடிக்கப்பட்டுள்ள இயந்திரமானது இருதயத்தின் வேலையைச் செய்து வருகிறது. (அதாவது நின்றுவிட்ட இருதயம் துடிக்கும்படி செய்கிறது.) இறந்துபோன நாய் ஒன்றுக்கு மேற்கூறிய மின்சார இருதயம் வைத்துப் பரிசோதிக்கப்பட்டது. அந்த இருதயத்தை வைத்த சில விநாடிகளுக்கெல்லாம் நாயினுடைய இருதயமானது துடிக்க ஆரம்பித்ததாம்; ரத்தமும் நாலா பக்கங்களிலும் பரவ ஆரம்பித்ததாம்; நாய் கண்களைத் திறந்துகொண்டதாம்; அநேக மணிநேரம் உயிருடன் கூடி இருந்ததாம். அது வெளிச்சத்தையும் துன்பத்தையும் அறிந்து கொண்டதாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

பிரபவ௵ ஆவணிமீ—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,
பசலி 1337—கொல்லமாண்டு 1103—ஹிஜரி 1346
இங்கிலீஷ் 1927௵ ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ

| ஆவணிமீ | ஆகஸ்டுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | புத | பஞ்32-55 | ரேவ29-3 | மர60 | விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 18 | வியா | சஷ்26-28 | அஸ்24-33 | அ24-33சி | கரிநாள், சீதாளவிரதம் |
| 3 | 19 | வெ | சப்20-58 | பர✕20-55 | சித்60 | கிருத்திகை [கடன் நீக்க |
| 4 | 20 | சனி | அஷ்16-28 | கிரு18-20 | அமி60 | அவமாகம், மாடு வாங்க |
| 5 | 21 | ஞா | நவ13-13 | ரோ16-58 | சித்60 | ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி |
| 6 | 22 | திங் | தச11-3 | மிரு16-43 | அ16-43சி | பும்சவனம், உபநயனம் |
| 7 | 23 | செ | ஏகா9-58 | திரு17-30 | ம17-30சி | சர்வமத்வ ஏகாதசி |
| 8 | 24 | புத | துவா9-55 | புன19-18 | சித்60 | பிரதோஷம், விவாகம் |
| 9 | 25 | வியா | திர10-55 | பூசம்22-5 | அ22-5சி | கரிநாள், மாசசிவராத்திரி |
| 10 | 26 | வெ | ச 12-50 | ஆயி25-45 | மர60 | சர்வத்திர அமாவாசை, நவக்கிரக சாந்திசெய்ய |
| 11 | 27 | சனி | அ15-35 | மக30-25 | அ30-25சி | குசோத்பாதினி [எழுத |
| 12 | 28 | ஞா | பிர19-28 | பூர35-58 | சி35-58அ | சந்திரதெரிசனம்,சித்திரம் |
| 13 | 29 | திங் | துதி24-13 | உத்42-20 | சித்60 | சுபமுகூர்த்தங்கள் செய்ய |
| 14 | 30 | செவ் | திரி29-43 | அஸ்46-55 | சித்60 | ஸாமவேத உபாகர்மம், சோடசோம விரதம் |
| 15 | 31 | புத | சது35-48 | சித்57-3 | சித்60 | விநாயகசதுர்த்தி |
| 16 | செப்டம்பர்மீ 1 | வியா | பஞ்42-8 | சுவா60 | அமி60 | |
| 17 | 2 | வெ | சஷ்48-5 | சுவா4-38 | சித்60 | |
| 18 | 3 | சனி | சப்53-15 | விசா11-50 | சித்60 | |
| 19 | 4 | ஞா | அஷ்57-3 | அனு18-0 | மர60 | |
| 20 | 5 | திங் | நவ59-5 | கேட்22-45 | சித்60 | |
| 21 | 6 | செவ் | தச59-5 | மூல25-38 | அ25-38சி | |
| 22 | 7 | புத | ஏகா56-55 | பூரா26-23 | அமி60 | |
| 23 | 8 | வியா | து52-40 | உத்24-58 | சித்60 | |
| 24 | 9 | வெ | திர46-45 | திரு21-43 | ம21-43சி | |
| 25 | 10 | சனி | சது39-25 | அவி16-45 | சி16-45அ | |
| 26 | 11 | ஞா | ○30-58 | சத10-38 | சித்60 | பௌர்ணமி |
| 27 | 12 | திங் | பிர21-48 | பூரட்3-43 உத்56-33 | ம3-43சி | அவமாகம், மாளயபட்ச ஆரம்பம் |
| 28 | 13 | செவ் | துதி12-43 | ரேவ49-35 | சித்60 | அசூன்யசயன விரதம் |
| 29 | 14 | புத | திரி3-55 சது55-55. | அஸ்43-15 | ம43-15சி | அவமாகம், 6-க்குள் மழை [அடுப்புவைக்க |
| 30 | 15 | வியா | பஞ்48-50 | பர37-55 | சி37-55ம | மூலிகை உபயோகிக்க |
| 31 | 16 | வெ | சஷ்43-13 | கிரு*33-55 | சி33-55ம | கிருத்திகை, சந்திரசஷ்டி [விரதம் |

| | | | |
|---|---|---|---|
| குரு | | | ராகு |
| — | 9௳ சிம்-புத<br>14,, கன்-செ<br>15,, சிம்-வ-சு<br>24,, கன்-புத | | புத<br>சூரி<br>செவ் |
| கே | சனி | | சுக் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.